அண்டகோளகைமுகடுறுநெடுமுடியனந்தஞ்
சண்டபானுவோர்வடிவெடுத்தனவொளிதழைப்பக்
கண்டகங்கதிரொழிப்பவோர்கனகமால்வரைமேனி
முண்டகங்களாயிரமுகிழ்த்தெனக்கரமுகிழ்த்து. ௨

காற்றுமொன்றுதீயொன்றலைவிரண்டிலைகடப்பக்
கூற்றமென்பதுமொன்றலாவிரண்டிலைதுமைப்பத்
தோற்றயன்சிரங்கலைகளைந்திலதமிப்ப
வேறுமெழுந்திசையெட்டலாப்பிறிதிலையிருப்ப. ௩

குணாபுறக்கடலொன்றலாவிரண்டிலைகுடிப்ப
வணாசெய்மேருவுமொன்றலாவிரண்டிலைவளைப்ப
வுணாசெயண்டமேற்பித்திகையிரண்டிலையுடைப்பப்
பரசுபாணியாயழைத்ததென்பணிக்கெனப்பணிந்தான். ௪

பொன்பருப்பதமண்டமெண்டிசைகள்யாம்புரிந்த
மென்பரப்பெலாமழிப்பதருதித்திடேல்வீர
வன்பகத்திலாச்சிறுவிதிபெருமகமழித்து
வன்சிரத்தையுந்துணிதியென்வருகென்றன்வரதன். ௫

என்னலும்பணிந்தேகினனிறைவிபாற்சென்றி
யன்னைபத்திரகாளிபல்கணத்தொடுமனைந்தா
டனிடைப்பலகோடியர்வீரரைத்தந்தான்
பின்னர்முன்னருமருங்கினுநெருங்குறப்பெயர்ந்தான். ௬

ஆனைதந்தபிப்போர்வையுமடற்புலிகொடுத்த
தானையும்பெருந்தானையுங்கடற்புலிதாங்கு
மேனமாமருப்பணியுடனெரிகடற்கிடையே
போனமாமறைமீட்டசேற்கணைகளும்பொலிய. ௭

உரவுமார்பிடைச்சிங்கவேற்றுரிவையுத்தரிகம்
விரவுமாசுணக்கங்கணமலிபணிமணிகள
கரதலந்தொறுமகந்திரக்கலைமதிக்கண்போற்
பிரமமாலசிரமாலைகள்புயந்தொறும்பிறங்க. ௮

ஆயிரம்பணநெடுமுடியுடையகச்சசைய
வாயிரங்குபொறகழலொலியுருமொலிமடுப்பச்
சேயிருந்திருமுகந்தொறுஞ்செறிநுதல்விழியாற்
காயகங்கையும்புறக்கடல்களுங்குடர்சலங்க. ௯

வடிநெடுந்துடைகொடிகளவானகதிரொளிமறைப்ப
விடைநெடுங்கொடிநிலவுமேலிருளெலாம்விழுங்க
வடிபெயர்ந்திடும்விசைதொறுந்திசைதொறுமதிரத்
தொடிநெடும்பணிசுழாமதமண்டலந்தூர்ப்ப. ௰

அடல்செய்தின் புயமெண்டி காமுகவெளியுடைப்ப
வுடையபொன் முடியண்டகோளகைமுகடுடைப்பப்
படைகள்கண்டகர்மனந்தொறுங்கொடுங்கலல்பரப்பத்
தொடையன்மார்பமுநடித்ததோள்களும்வலந்துடிப்ப. ௱௧

கண்களிற்பொறியூழிவெங்கனலையுங்கனற்ற
விண்களிப்புறமூடுக்கள்போன்மலர்த்தொடையிடைய
மண்களிறபிலமதிர்தரவரும்பெருஞ்சேனை
யெண்குலப்பெருங்கிரிகளைவிடைசகளாலெடுப்ப. ௱௨

கன்னிகாவுயர்கயிலையின் றிழிந்தொருகோடி
துன்னுபூதமொய்வொன்றுபேரண்டமுஞ்சுமப்ப
வுன்னிவாங்கியவுயர்மணிக்கொடிஞ்சியந்தேர்மே
லெண்ணடாள்பவனே தினனுலகமீட்டற. ௱௩

வேறு.

கப்பணம்பிண்டிபாலங்கணிச்சிமுட்கரம்கோடாரி
வைப்பெருஞ்சரிகைதோட்டிவச்சிரம்வெதிணரந்தண்டச
துபடைமுசலங்கைவாள்சூலமேதுங்கிரியாது
வெப்புடைபபண்டார்காலமின்னெனப்பரந்துமின்ன. ௱௪

முருடுசல்லரிகள்பேரிமுரசுமத்தளிதடாரி
காடிகைநயிலமொரநதைசமணிபடகமபமபை
திரடருபணவாதகதைந்தண்டிமாணர்காளம்
வருடகாலத்துத்தோனறமாமுகிலொலிபோலார்ப்ப. ௱௫

வேறு.

நந்திபல்கணத்திரளொடுநெனிபுறங்காப்ப
வந்துசண்டனும்வலத்துறவிடதருமணிமான்
முந்துபல்கணநாதரும்பூதருமுரணிச்
சிந்துரகுமரர்திரிதெனச்சாரிகைதிரிய. ௱௬

புலிமுகத்தனகலைமுகத்தனவயப்புலிமா
ளுளிமுகத்தனகொய்யுளையுத்தரிமுகத்த
கலைமுகத்தனகரடியின்முகத்தனகணங்கண்
மலைமுகத்திறுமறிகடனமுகத்திறும்வாள. ௱௭

அடித்தலங்களிலலைகடல்கலக்குவனந்தன்
முடித்தலங்களுமுளுக்கரின்றுடுவமுகிலோ
டிடிக்குலங்களைப்பிசைவனபிசைவனவிசையோர்
செடிக்கலங்குறக்கணமண்டலங்களைக்கிழிப்ப. ௱௮

மேற்றிசைச்சரிவேட்டிசைக்களிற்றின்மேல்விடுப்ப
காறத்தினைக்கொடுசெழுற்றுவகனலைவாய்மடுப்ப

போற்றுபாரிடஞ்சூழ்தரத்தேர்மிசைப்போந்தான்
கூற்றினுக்குமோர்கூற்றெனும்வீரகோளரியே. ௰௯

காளிவஞ்சனிகாடுகோள்கடற்படைகளைக்
கூளிசிந்துவெங்குறள்புலிப்பறழெனக்குழும
வாளிசென்றெனச்சென்றனரடற்கணநாதர்
தூளிசென்றதிசிறுவிதிமகக்குழிதூர்ப்ப. ௨௰

மலையதிர்ந்தனமாதிரமதிர்ந்தனவான
நிலையதிர்ந்தனவீரர்களதிர்தலுநெடுநீ
ரலையதிர்ந்தனமகஞ்செயுமயன்மகன்குடுமித்
தலையதிர்ந்திடவதிர்ந்தனவானவர்தகுதி. ௨௧

காலைவாளுடுத்தெரிந்தனகதிர்தலைநோக்கிக்
கோலஞாளிகள்குரைத்தனநரிக்குழாங்குழுமிச்
சாலையூடவிகவர்ந்தனதக்கனுதியர்க்கு
மேலவேமனமடித்தனதுடித்தனவிடமே. ௨௨

தக்கனானவன்றன்மகக்கடிந்துதான்புரிவான்
மிக்கனாவதுகாண்டுமென்றயனின்றவிரிஞ்சன்
முக்கணாயகன்சேனைகண்டுளம்வெரீஇமுதுவான்
புக்குநாமினியுய்ந்தனமெனப்புறம்போனான் ௨௩

தொகைத்தடங்கடல்வீரன்மாப்படைவருந்துழனித்
தகைக்குமாலுமாலாகினன்முனிவருஞ்சடைத்தார்
திகைக்குமன்னரேயாகினர்தேவர்கோன்முதலோ
ரகைத்துமாமகமயரும்வானவர்களுமயர்ந்தார். ௨௪

ஞாலமேழையுமீன்றநாயகியையுமிகழ்ந்து
மாலயற்குயர்தேவையுமறந்துளான்மகஞ்செய்
சாலைபுக்கதேயவலமென்றமரருஞ்சலித்தார்
மேலினிச்செயல்யாதெனமுனிவரும்வெருண்டார். ௨௫

ஆதிநாயகன்புதல்வனைமுன்னிடாதமிர்த
மோதவாரியிற்கடைந்துமுன்பட்டபாடுணர்வோ
மாதுபாகனையிகழ்ந்தவன்மகத்திடைமதிபோய்ப்
போதன்மேயினம்புரிந்தனம்பிழையெனப்புகல்வார். ௨௬

துன்றுதிக்கெலாந்துந்துமியதிர்தலுந்துளங்கிக்
குன்றடர்த்தவன்முதலினோர்மாலொடுங்குழுமி
யின்றினிச்செயல்யாதெனவெருவுவார்க்கெதிரோ
சென்றுதாக்கினபாரிடப்பெரும்படைத்திரள்கள். ௨௭

ஓலமிட்டெழுகூளிகளும்பர்மேலுதிரக்
கோலமிட்டெனக்கிழித்தனவாய்வழிகுருதி

காலவிட்டனவானவர்மகளிர்காதரிந்து
நாலவிட்டனபுராதராகியர்சபைநாப்பண். ௨௮

மனமுருத்தெழுகுறட்படைமகப்பெருஞ்சாலை
யனல்கொளுத்தனயாகமேற்கொழுநகனலவித்த
கனகநற்சுவரிடித்தனவுடைத்தனகடங்கள்
சினைமலர்த்தருப்பிடுங்கினநடுங்கின திசையே. ௨௯

சாலையிற்கனல்கொளுத்துசாரதர்தமைமொருகலி
பாலையிற்படுகரும்பெனவலைத்தனரமரர்
பாலையிற்பெருங்கிழத்திசென்றமரர்தம்படைமேல்
வேலையிற்கலங்கலக்கிடுஞ்சுறவெனமிடைநதாள். ௩௰

மிடைந்துமுத்தலைப்படையினுலதிர்த்துவாள்விதிர்த்துத்
தடிந்துசென்னியுமூளையுந்தகர்படததிலையக்
கடைந்தமத்தெனத்தண்டினுலலைத்தனள்காளி
யுடைந்துவிண்ணவரோடினர்தரிபடாதலைந்து. ௩௧

அமரர்தாங்கியகொடிப்படைநெரிதலுமழன்று
நமனுமங்கியுநிருதியும்வருணனுநலங்கூர்
தமனியப்பெருந்தலைவனும்பாகசாதலனுந்
தியில்முற்றெழுபவனனுமெதிர்ந்தனர்செருவில். ௩௨

வலமழுப்படைநந்திதேவனுமணிமானுங்
குலவுபல்படைச்சண்டனுஞ்சாரதர்குழுவுங்
கலகவிற்கொடுவாள்கொடுகதைகொடுகலந்தார்
புலவுமைக்கடன்மேல்வடவனற்றிரள்புகல்போல். ௩௩

இந்திரன்பொரநந்திபல்கணைதொடுமெதிர்ந்தான
முநதுசெங்கதிர்தழன்முதன்மூவர்மேற்சண்டன
வநதெதிர்ந்தனனெறும்வலித்தடம்புயமணிமா
னுந்துமாமதிவருணனுதியருடனுடன்றான். ௩௪

பம்மையார்த்தனபடலைகையார்த்தனபணைபோர்க்
கொம்புதாரைகள்குழுறினபிளிறினவேழ
மம்புவார்சிலைமுட்கரமெறிமழுவடல்வாள்
சம்பமாதியபடைகொடுதாக்கினாசமர்மேல. ௩௫

தாள்களைப்பெருஞ்சிரங்களைக்கரங்களைத்தடிந்து
தோள்களைச்சிறபுறங்களையுரங்களைத்துமிந்து
வாள்களிற்பொருசாரதப்படைகளைமடுத்துக்
கோள்களைபபொருகேசனைவானவர்கொதித்தார். ௩௬

சித்தனைப்பெருந்தேவனையியக்கர்விஞ்சையரை
மெய்த்தவினனரர்கருடர்கிம்புருடனைமுரணைக்

கைத்தலத்தினாற்புடைத்துவெங்காலி னாலுதைத்துத்
தத்தவானிடத்தெறிந்தனர்பாரிடத்தலைவர். ௩௭

கருநிறத்தெழுகாரெனக்கார்முகந்தாங்கி
யுருமெனச்சிறுநாணொலிதிசைதொறுமொலிப்பத்
தருமழைப்பெருந்தாரைபோலமரர்கோன்சரந்தூஉய்
வருசனப்படைதுரந்தெதிர்நந்திமேன்மலைந்தான், ௩௮

ஒன்றுபத்துநூறாயிரமெனப்பொலிந்தலவாத்
துன்றுபத்திரமாயிரம்வாசவன்றுரப்ப
நின்றநந்திதன்கணிச்சியாலடுதலுநீறாய்ப்
பொன்றிவிட்டனவிளக்கில்வீழ்பதங்கமேபோல. ௩௯

நிரைநிரைப்பொருகணையெலாமவ்வணநிகழ
வரையெனப்பெருங்கதைகொடுமலைந்தனன்மகவான்
புரைதவிர்ப்பவனமழுவினாற்போயதுபொடியாய்த்
தரைதனிற்சினத்தெறிந்தமட்கலமெனத்தகர்ந்து. ௪௰

குலிசம்வாசவன்பிடித்தனனிடித்தெதிர்குமுறு
மொலியினாற்பெருஞ்சாரதர்மலைந்தனருலைந்தார்
வலியையேயினியிலையெனவள்ளன்மேல்விடுத்தான்
கலைகளார்த்தெனவார்த்தனர்வானவர்சனமே. ௪௧

எரிபரப்பியெண்டிசைகளும்புகைத்துருமேறுங்
கரிபடப்படர்புரந்தரன்வச்சிரக்கதிர்வாள்
விரிசடைப்பெருநந்திதன்கணிச்சியினமிடலா
லெரிகனற்கிடுஞ்சமிதைபோலடலையானதுவே. ௪௨

காயும்வச்சிரப்பொருபடைநெரிதலுங்கனன்று
றாயிரந்தடங்கண்ணோனுடற்பெருங்கரியைப்
பாயவிட்டெதிர்படர்தலுங்களிற்றைவால்பற்றிச்
சேயமோதவன்றிசைதொறுங்கறங்கெனத்திரித்தான். ௪௩

கறையடிப்பெருங்களிறுமெருண்டுஞ்சுழற்றலுங்கலங்கிப்
பறவையின்குயிலுருக்கொடுவாசவன்பறந்தான
மறைபுகாதவிண்மறைதலுமழுவினான்மலையைச்
சிறையரிந்தவன்சிறையையுமரிந்தனன்செய்யோன். ௪௪

இயமனங்கியைநிருதியைப்பரிதியையிகலி
யயமணங்கியேழ்கரங்களிற்சிலகரமரிந்து
வயமணங்கிபல்லுகுத்துவானவரைவான்மடுத்துச்
சயமணங்கிப்பார்த்தாடினனெழில்வலிச்சண்டன். ௪௫

வருணன்வாயுவைத்தனதனித்துணைப்பொருமணிமான்
றருணவேர்த்தலைச்சனையத்தாளையைத்தடிந்து

கருணைவாழ்கெனவிருந்துனும்பருந்தொகோக
மருணமண்டலமறைத்திடும்பர்தரிலார்த்தான். ௪௬

அடித்துமார்பிடையுதைத்துமேற்கதுப்பிடையறைந்து
பிடித்துமெற்றியுந்துகைத்துமேற்பற்றியுமீர்த்துங்
கடித்தும்விஞ்சையர்விண்ணவர்தானையங்கடலைக்
குடித்துமைப்புயற்குழாமெனத்திரிந்தனகூளி. ௪௭

ஆழுமெண்டிசைக்காவலர்தொலைதலுந்தொலையாப்
பூழிமொய்த்தெழச்சாலையுட்சாரதர்புகுந்தா
ரூழியண்டங்களுடைப்பபோலவிக்கடமுடைத்தா
ராழிமால்பெருவேள்விகாப்பவனெதிரடர்ந்தான். ௪௮

தக்கனெங்குளான்சாலையெங்குளதவன்சாலை
புக்கவானவரெங்குளார்போதுமின்புகுமின்
சிக்கயார்த்திவட்கொணர்மினென்றமரிடைச்சினவி
முக்கணாயகனருளாலுஞ்சாரதர்மொழிவார். ௪௯

வெற்றியானைவிட்டோடினனிந்திரன்மேதிச்
சிற்றியானைவிட்டேகினனந்தகன்றேவர்
மற்றியாவருமிரிந்தனர்வேள்விகாவலன்போ
லெற்றுபோர்செயப்புகுந்தனன்முகுந்தனேயென்றார். ௫௰

எந்தையார்பதம்பணிந்தகண்ணிடந்துசாத்தியதும்
வந்தையாவருள்புரிகெனத்திகிரிவாங்கியது
முந்தையார்திருவருளினைமொலிபெற்றதுவுஞ்
சிந்தையாலுறமறந்தனனேகொலாதிருமால். ௫௧

யாங்குளானவன்யாங்குளானெனப்புகாவெதிர்த்து
தாங்குநின்னுழைத்தக்கனைத்தருதியோசமர்மே
லூங்குநின்றெதிர்பொருதியோவென்னலுமுருத்து
வாங்குவெஞ்சமர்க்கெழுந்தனன்கலுழன்மேன்மாயன். ௫௨

ஒறுத்துமால்சிறுநாணொலியுருமெனவொலிப்ப
மறுத்துவில்லிடுமுகிலெனச்சரமழைவரதன்
குறித்ததேரின்மேற்காளிமேற்கூளிமேற்குறண்மேற்
பொறுத்தநந்திமேற்சண்டன்மேற்கணங்கண்மேற்பொழிந்தான். ௫௩

மாதவன்கணைகணங்கண்மேற்சொரிதலும்வரதன்
மோதுதானவர்தயித்தியர்சேனைபோன்முகுந்தா
பூதர்மாப்படையெளிதெனநினையலைபொருபோர்
பேதுறுயெனில்வருகெனவொருசிலைபிடித்தான். ௫௪

வேறு.

பிடித்தனன்மலன்சாபம்பிறந்தனபகழிக்கூற்றங்
குடித்தனசெறுநராவிகுவிந்தனதுணைபக்குன்றம்

துடித்தனவுடல்கள்சோரிசொரிந்தனகணங்கள்பாட
நடித்தனகவந்தபந்தநடுங்கினதிசைகளெங்கும். ௫௫

சேனையைத்துமிக்குஞ்சில்லித்தேர்களைச்சிதைக்குந்தேவர்
தானையைத்தொலைக்குந்தானைத்தலைவரைத்துணிக்குந்தாவி
யானையையுருட்டும்வாசியடர்த்தெழுமமலன்பாணம்
வானமுஞ்சுடலுந்திக்கும்வரைகளும்வரையாதேகும். ௫௬

கரங்களைக்கடிந்துநீண்டகால்களைத்தடிந்தும்வீர
ருரங்களைப்பிளந்துந்தாவியுயிர்களைக்குடித்துமோதிச்
சிரங்களைத்துணித்துமூளைதெறிபடத்தகர்ந்தும்வானோர்
வரங்களைப்புகுந்துகுறையாடினவரதன்வாளி. ௫௭

நீடினவிதடர்சேனைநெரிபடவுரங்கள்சீறி
யோடினவுலகந்தோறுமுலவினவொருவன்வாளி
வீடினவுலகங்கீண்டுமெய்ந்நிணம்பருகியாவி
தேடினதிசைகடோறுந்திரிவனபொருவுமாதோ. ௫௮

அமரராயுடலுண்டார்களலகையாயுடலுண்பாராய்ச்
சமருளார்படைகண்மாய்ந்துதம்பிரான்படையாய்ச்சூழக்
குமரியானலகைக்கூட்டங்கூளிகள்குரவையார்ப்பத்
திமிலையார்களத்திற்காகப்பந்திரசிர்வேட்டன்றே. ௫௯

வேறு.

நொடிக்குளண்டமுமகண்டமும்வெடிபடநொறில்போர்
முடிக்குமாயினுமுடிவிலான்விடுகொடுஞ்சரங்க
ளிடித்தெழுந்துலகெங்கையினுமெண்ணலராவி
குடித்துமீள்வனபரவுவார்க்கின்னருள்கொடுத்து. ௬௰

வெய்யவோர்பசுவித்துமகனவிதியுர்ருன்விரவார்
கையுமெய்களும்யூபமாக்களமமர்க்களமா
செய்ப்பேவிவாய்நெருப்புமிழ்ந்தவியுணவிரட்டி
யையன்மாப்படையனந்தமாம்பசுப்படுத்தன்றே. ௬௧

ஏறுவெஞ்சமரிமையவர்தொலைதலுமெதிர்போர்
வீறுவெஞ்சினமாதவன்வளைத்துவெங்கணைக
ளாறுநூறொருதொடைதொடுத்தனனதையமல
னாறுநூறெனநூறினொன்றொருகணைநுதியால். ௬௨

ஆயிரம்படைகாந்தமால்விடுத்தலுமனகன்
பாயிரும்படைகாந்தநேரொருகணைபணித்தான்
மாயவன்பதினாயிரங்கணையிருண்மலைந்தான்
றூயவன்கணையாயிரங்கதிரெனத்துரந்தான். ௬௩

மாரியிற்சரமாரிபெய்தனன்மழைவண்ணன்
சூரிவிற்சரஞ்சுறையின்விடுத்தவைமுருக்கிப்
பாரிடத்தவன்முராரிதேர்ப்பரியினைப்படுத்துத்
தேரிடத்தவன்பாரிடத்தவனெனச்செய்தான். ௬௪

சேமத்தேர்மிசைக்குதித்தனனெதிர்த்தனன்றிருமால்
வாமத்தானையின்வலம்படுகணைகளான்மலைந்தான்
சோமத்தாரவன்சரமொருதொடையினூறறுளவத்
தாமத்தான்விடுகணையொடுசிலையையுந்தடிந்தான. ௬௫

புதையவெஞ்சரஞ்சிலையொடுதலைதலும்புழுங்கி
யிதையமண்டுறத்தண்டமொன்றெடுத்தரியிறைமே
லுதையமால்வரைக்குருதிமால்வரையெனவுய்த்தான்
கதையினற்கதையிலையெனக்கடிந்தனன்கடவுள். ௬௬

குல்லைமாலினித்திகிரியேபடையெனக்குறியா
வெல்லையண்டமும்புவனமூரடுக்குறவெடுத்து
வல்லையேயினித்தாங்கெனவலியினால்விடுத்தா
னெல்லைவானவரார்த்தனர்சாரதருலைந்தார். ௬௭

நேமியம்படைநேமிமால்விடுத்தலுநெரிந்து
பூமியந்தரநெருப்பெழகொதித்தெழும்போதின்
மீமிசைத்தவுங்காரமொன்றிசைத்தனன்விமலன்
காமியந்தனைப்பக்குவன்மடுப்பதுகடுப்ப. ௬௮

அலைகள்வறறுறக்குடிததமூவுலகமுமதாத்து
மலைகளைப்பொடிததெதிர்வருதிகிரிமாப்படையை
மிலைதரப்புயப்பொருப்பின்மேலேற்றனன்வீரன்
றலைவர்போற்றலைமாலையிற்கடைமலரிதயங்க. ௬௯

சண்டநேமிபோய்வாள்கொடுகுறைகடறசயனன்
கொண்டன்மின்னொடுவருதல்போல்வருதலுங்குமுறி
யண்டமெண்டிசைவெடிபடவார்த்தனனையன்
விண்டுவாய்வெரீஇயுருமொலிக்கரவெனவீழ்ந்தான. ௭௰

வீழ்ந்தவன்றனைத்தடிந்திலனருளினால்விடுத்தா
னாழ்ந்ததண்கடலரண்புகுந்தொளித்தனனவனுஞ்
சூழ்ந்ததிண்குரலிடித்தலுந்துடித்துவீழ்ந்தனனே
போழ்ந்திடும்படைதொடுத்திடலாற்றுமோமாயவனம். ௭௧

சண்டனுந்திருநந்தியுந்தனிமணிமானு
மண்டுமேதிமேற்சண்டனைத்தனதனைமடுத்துக்
கண்டகால்கனல்வருணனைநிருதியைக்கடைநாட்
கொண்டலாமெனவாய்வழிகறையுகக்குமைத்தார். ௭௨

ஒருவனைச்சிவபரமனைக்கருதலாவுதைய
னொருவனைத்தனிவிழிகுடைந்தனர்மதியுருவா
மொருவனைத்தலைநிலத்தொடுதேய்த்தனருண்கக்கு
மொருவனைக்கரங்களைந்தனர்நாவையுமொறுத்தார். ௭௩

குடர்சரிந்தனர்தாள்குறைந்தனர்கரங்குறைந்தார்
முடிசிதைந்தனர்விண்ணவர்விஞ்சையர்முதலோர்
படுகளந்தனிற்கிடந்தனருடல்பதைபதைத்தா
ருடையநாதனையிகழ்ந்தவர்யாவரோயுய்வார். ௭௪

கணையுங்குந்தமுஞ்சுரிகையுங்கயலினங்கடுப்ப
வினையில்குஞ்சரமிடங்கர்மாவெனவெடுத்தேகித்
தினைநெடுங்களக்குருதியாறுயர்பிணத்திரளர்
மனைகடந்துதேர்க்கலிங்குமுன்சுழிந்துபாய்ந்ததுவே. ௭௫

அண்டர்சேனைகடுலைதலுமமர்க்களமகன்று
மண்டுசாரதிருபுடைவலம்புரிமுழக்க
விண்டவேள்வியஞ்சாலையிற்புகுந்தனன்விமலன்
கண்டபல்வகைக்கணங்கண்மேற்புகுந்தனகணங்கள். ௭௬

தூண்கள்பற்றியபசுக்களைவிடுத்தனர்துரப்பா
ரூண்கள்பற்றியவமரரைமுனிவரையொறுப்பார்
சேண்குடத்தவிமுனிவர்தஞ்சிரங்கண்மேலுடைப்பார்
வீண்குவைப்படுதிரவியங்கடல்புகவீழ்ப்பார். ௭௭

தீர்த்தனெம்பிரான்றனையிகழ்வேள்வியைத்தேவர்
பார்த்தகண்களைப்பறிப்பனகேட்டவர்செவியை
யேர்த்தகைகளையவிநுகர்நாவினையீர்த்துக்
கூர்த்தவாளினாலரிந்தனதிரிந்தனகூளி. ௭௮

வாணியிந்திராதுண்டமுஞ்சசிவனமுலையுஞ்
சேணரம்பையரதிதிமற்றவர்குமிள்சிமிழு
நாணிரம்பவோகணனைச்சிலகழியவோகடுவே
காணுமுன்பிடித்தரிந்தனள்சொரிந்தனள்காளி. ௭௯

திக்கனைத்தையும்யாகதண்டத்தமர்செலுத்தி
யிக்கனைத்தவர்பணிசெயமுனிவரோத்தெடுப்ப
முக்கனைந்தழன்முருக்கெனப்பூத்தமுன்னிருந்த
தக்கனைச்சிகைபிடித்துவாள்பிடித்தனன்றலைவன். ௮௰

மக்கடாரமுமுலைகண்மூக்கிழந்தமைமதியாய்
திக்கடாமல்விட்டோடியதேவரைத்திருப்பாய்
மிக்கடாவினைவிடிந்ததோமுடிந்ததோவேள்வி
யக்கடாவுனக்கெளியனோமழுப்படையமலன். ௮௧

வேறு.

சிற்பராபராமகளாச்சிவபெருமான்மருகாக
முற்பராய்த்தவம்புரிந்தமுறைமையாலுலகாண்டாய
தற்பராபரனைமறுத்திகழ்ந்துதனித்தாய்பாவி
யற்பரானவர்முடிமேற்றங்குமோவபிடேகம். ௮௨

உன்னையின்றெடுத்தவனேயுயர்மவுலிதேடவவன்
றன்னையின்றெடுத்தவனேதாட்கமலந்தேடநின்ற
வென்னையீன்றெடுத்தபிரான்றன்னைமதத்தாலிகழ்ந்து
சொன்னவாய்சிரத்தினொடுந்துணிக்கின்றேனெனத்துணித்தான். ௮௩

எச்சனாயத்தவருமிடைந்துமாய்ந்தனர்போத
னெச்சனுஞ்சிறுவிதியுமிமைப்பொழுதில்வீடினு
னெச்சனாமல்லதிலையெனவிரலையாலெழுந்த
வெச்சனுமவன்றலையும்வாளினாலறவெறிந்தான். ௮௪

மந்திரத்தின்முறையறியார்பூசைபோன்மகவேள்வி
யிந்திரற்குமிமையோர்க்குமுடியாமலிருந்ததாற்
சிந்துரத்தமொடுதக்கன்சிரமறுத்தாகுதிபுரிந்து
தந்திரத்தினொடுமுடித்தானொருகணத்திற்சகாரதன். ௮௫

அம்பராகவேமகத்திடையவியுணப்புகுந்தா
ரம்பராகவேகளத்திடையவியுண்டாரதனாற்
றம்பரவாரிதிவிடமுண்டதம்பிராற்பரவுந்
தம்பலாதவர்நினைத்தவாமுடிப்பரோசகமேல். ௮௬

உகமழிப்பவனையபோர்வீரனென்னலாக்
ககமழித்திடப்பொருதபோய்க்கணத்தொடுகயிலை
யிகன்மழுப்படையெம்பிராற்றொழுதவனீந்தான்
மகமழித்ததோர்நாமமுமழிவிலாவரமும். ௮௭

கண்ணுவீரனுநந்திபல்கணமுநாரதனுங்
கண்ணனும்புடைபரவவீற்றிருந்தருள்கயிலைப்
பண்ணவன்றனைப்பணிந்தனளெழுந்தனள்பகர்வா
ளண்ணல்பாகமுமாகமும்பிரிகலாவணங்கு. ௮௮

வேறு.

ஏவரும்பரவுநின்னையெண்ணலாதிருந்ததக்கன்
பாவையென்றென்னைக்கூறும்பரிபவமொழிப்பாயென்று
தேவிநின்றுரைப்பநாதன்றிருவுளமகிழ்ந்துநம்பா
லாவல்சேரிமவான்செல்வியாகெனவருளிற்போநதாள். ௮௯

சிறந்தநான்முகத்தோன்போற்றிச்செகங்களின்குறைபாடோதி
யிறாதவருயிரைமீட்பானெம்பிரானருள்பெற்றேனி

யறுங்கைகால்சிரங்களாதியவையவமபொருத்துமேல்வை
யுறங்கினர்விழித்தாரொன்னவெழுந்தன ரும்பரெல்லாம். ௧௰

அத்தலையூபந்தோறுமவரவர்முடிபெற்றுய்ந்தார்
செய்த்தலையூபத்தூடிணைத்தலைபறிபோய்த்தக்கன்
மைத்தலையூபமேவிவானவர்தலைமைதீர்ந்தான்
மெய்த்தலைவிதியேவந்துவிலக்கினும்வினைவிடாதால். ௧௧

யாகத்தின்வினையாய்த்தக்கனெடுத்தநல்வினையேயென்றுஞ்
சோகத்தீவினையாய்வந்துசூழ்ந்திடத்துயரிலாழ்ந்தான்
மேகப்பூங்குழலோர்பாகனருளன்றிவினைகளாலே
பாகத்தினுயிர்கட்கெல்லாம்பயனறிந்தூட்டற்பாற்றே. ௧௨

சிவநெறியோர்ந்துமோராச்சிறுவிதிசெயலின்மாய்வுங்
குவவுறுதிணிதோள்வீரனகொறறமுமுரைத்தாம்பின்னர்த்
தவநெறியில்லான்வேளவிச்சாலைபுக்குழன்றவானோ
ரவநெறியடைந்தபாவமடைந்ததைதொடர்ந்துசொல்வாம். ௧௩

௰௪—வது தக்கன்வேள்வியழிந்தசருக்கமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்—ஆ௱௪௰௩.

---

## ௰௫-வது-தேவர்கள்சிவத்துரோகமடைந்தசருக்கம்.

மோலியிற்பிறைவைத்தானைமுறையிலாதிகழ்ந்ததக்கன்
சாலையிற்புகுந்துவேள்விசமைத்ததீவினையினாலே
மேலையிலமையோர்தம்மைமெணமதிவிரவலாத
மாலையிலிருள்போல்வந்துவளைந்ததுசிவத்துரோகம். ௧

தளர்மதிமுடித்தார்சேயாதவிர்தலாலமரர்பாவக்
களர்நிலத்திடைக்காலாழ்ந்தகயக்குறாமென்னத்தாழ்ந்தார்
கிளர்சமத்தஞ்சியோடிகிழிப்படுமவுணராங்கு
வளர்நகரிக்கணுமபொற்றுக்கிவளமெலாங்கவர்ந்தார்மன்னோ. ௨

பல்லவமுயிர்க்கும்பாரிசாதமும்பசும்பொன்னாடுஞ்
செல்வமுஞ்சுரபிசிந்தாமணிகளுந்தெய்வமாதர்
நல்லெழிற்புணர்வுநீங்கிநல்குரவடைந்தார்கல்லாப்
புல்லர்தம்மருங்கிற்சேர்ந்தபுலவர்போற்புலவரெல்லாம். ௩

கவிகையுமரசும்வாழ்வுங்கடவுள்வாரணமுஞ்செம்பொற்
சிவிகையுமிழந்துகாலாலுழந்தனன்றேவர்வேந்த
னவியமுமறியுமேந்துநம்பனை[illegible]ார்க்கென்றும்
புவிதனிற்பிலத்தில்வானப்பரப்பினிற்புகல்வேறுண்டோ. ௪

இந்திரபதத்தைநீத்தவிந்திரனமுதலோரொல்லா
மந்திரக்கிழவர்சூழமறைநெறிமுறையிற்சூழ்ந்த

தந்திரக்கலைகளுவான்சதுமுகத்தவனேயென்று
சுந்தரப்பதுமத்தண்ணனுறைநகர்நோக்கிச்சென்றார் ௫

வேறு.

பரவையர்முதுணைவுபோய்வாழ்வுபோய்ப்பனிநா
ளிரவுதாமரைக்காடுபோன்முகம்புலர்ந்திமையோர்
குரவனுன்முகன்கோயிலின்றிருக்கடைகுறுகிப்
புரவிபூண்டதேரிரவிமுன்கமலமேபோன்றார். ௬

காலிரண்டுகட்கமலமுமதிமுகநான்கு
மேலிரண்டிரண்டருமறைவிரிக்குநாத்தடமும்
பாலிரண்டினுநாலிருதடம்புயப்பணைப்பு
நூலிரண்டையுமகம்புறந்தரித்தநூன்மார்பும். ௭

மீதிலங்குநான்மகுடகோடிகள்வெயில்விரிப்புங்
காதிலங்கியகுண்டலமொளிவிடுகதிர்ப்பும்
போதிலங்கியகரங்களுங்கமண்டலப்பொலிவுந்
தாதிலங்கியதாமரைத்தாமமுநயங்க. ௮

நாவின்மாடத்துநறைவிரிநளினபீடத்துத்
தேவிபாரதிமகிழ்வொடுசிறந்துவீற்றிருப்ப
வாவிபேதகமனந்தகோடிகளுமங்குரிப்பத்
தாவில்வேதமுமங்கமுங்கலைகளுந்தளிர்ப்ப. ௯

மடன்முறுக்கவிழ் ○வனருகமண்டபநாப்பட்
சுடர்விளக்கெனவுறைதருசுருதிவானவனைக்
கடல்கொழித்தனகருணையங்கடவுளைக்கண்டா
ரிடர்தவிர்த்தனமினியெனவிறைஞ்சினரிமையோர். ௰

வானமாதியாலுயிர்க்குடல்கரணங்கள்வயக்கி
யேனபோகமும்புவனமும்வினைவழியிசைத்து
மேனகாலமுங்கருமமுநடைபெறவிதக்குந
தானபங்கயாச்சிரமனேபரமனேசரணம். ௰௧

வானநாதனேமண்பொதுத்தந்தையேமறைதேர்
கானவேதியர்களைகணேகருதுவார்கனியே
ஞானபாரதிநண்பனேநாற்பெருங்கோணிற்
பானுவாயொளிர்பகவனேசரணெனப்பணிந்தார். ௰௨

எந்தையேயெனவிறைஞ்சுவார்க்கெதிர்முகங்கொடுத்து
நொந்தவானவரெழுமெனத்திசைமுகனோக்கி
வந்தகாரணம்யாதெனப்பவளவாய்மலர்ந்தா
னந்தராதிபன்பரவிவாயபுந்தத்துநின்றறைவான். ௰௩

○ வனருகம்—தாமரை.

சேமமாநிதித்திறைகொண்டுவந்தெமைப்பரவு
நாமவாளுடைத்தானவர்க்குடைந்துநலிந்தோங்
காமதேனுவுங்கற்பகக்கானமுமிழந்தோஞ்
சோமசூரியர்வழங்கிடாத்திசைதொறுஞ்சுழன்றோம். ௰௪

வானமாநதிவைகறையாடலுமறந்தோந்
தானபானமுஞ்சந்தியுநியதியுந்தவிர்ந்தோம்
பீனமார்தனத்தரம்பையர்முயக்கமும்பிரிந்தோங்
கானமாமறையுறுதிபோய்வறிதுநாட்கழித்தோம். ௰௫

வளைக்கலம்புனையவுணராஞ்சுறவினமடுப்ப
விசைக்கலங்கவிழவணிகர்போலிடர்க்கடல்வீழ்ந்தோர்
நசைக்கலந்தனநறுஞ்சுவைக்கலந்தனநலயா
ழிசைக்கலந்தனமெமக்கிதுபுகுந்தனவென்றார். ௰௬

மிக்கநான்முகன்விளம்புவானென்மகம்விலக்கித்
தக்கனாவனல்லதற்கோமகஞ்சமைந்தா
னுக்கபேரவியுருத்திரபாகமுமொழித்தான
முக்கணாயகன்றனையுமிகழ்ந்தனன்முடிவால். ௰௭

தகவின்மக்களையழைத்தனனழைத்திலனசதியை
யகிலமுற்றவுமீன்றருளன்னையெனுணரான்
வகையுணர்த்தவுமுணர்ந்திலன்மதத்திலழிந்தான்
புகலினுங்கெடுமதிகளகண்டோற்றுமோபுகல்வீர். ௰௮

அறிவிலானவனப்படியாகுகவானற்
பொறியிலீருங்கள்புத்தியும்வெறுவிதாய்ப்போமோ
வெறிமழுப்படையிறைவனையாவரோனிகழ்ந்த
நெறியில்யாவருமிறப்பரோநீவிரோநின்றீர். ௰௯

ஆதியார்விடமுண்டதாலமரராயமர்ந்தீர்
காதுமுப்புரம்வெந்ததாற்கனகநாட்டுறைந்தீர்
மாதுபாகர்செய்நன்றியைமறத்தலினமகத்தா
லோதுநல்வினைதீவினையானதாலுமக்கே. ௨௰

நந்திநாயகன்முகுந்தனைப்படைப்பநான்வந்த
னுந்திமாமலர்மிசையவனருளினாலுதித்தே
னந்தநான்முதலின்றுகாத்திருந்தனமதனா
லெந்தையாரலாலெமக்குமோர்களைகண்வேறுண்டோ. ௨௧

அனந்தசாமியுமியானுமேத்தமலையரவம்
புனைந்தவேணியெம்புனிதனைப்பொருளெனப்போற்றீர்
மனங்கொண்மாமறையோதியுஞ்சுவர்க்கமேல்வந்நாதுங்
கனங்கொண்மெய்ந்நெறிகடந்தனிர்வையுறக்கடவீர். ௨௨

பாவமேதரும்பழிதரும்பகைவ்ராற்படுக்குங்
தாவசோபமேவினைத்திடுங்குலத்தையுந்தாழ்க்கு
மாவதாம்பொருளழித்திடுநரகிடையழுத்துந்
தேவராகிலும்விடுத்திடுமோசிவத்துரோகம். உ௩

கறையணிந்திடுங்கண்டனைப்பழித்திடுங்கயவோ
ரிறைசிவாகமஞ்சிவபுராணங்களையிகழ்வோர்
முறைமையன்பனையன்பர்வேடங்களைமுனிவோர்
மிறைசெய்கும்பிபாகக்கொடுநரகிடைவீழ்வார். உ௪

எழுந்திடாநரகழுந்தியுமியமதண்டத்தின்
கழுந்திருலடியுண்டுமேகற்பங்கள்கழிவார்
செழும்புனற்சடையெம்பிரான்சிவனெறியகன்று
பழங்கணெய்திடப்பரமதம்புகுந்தபாதகரே. உ௫

ஆகையாலுமைச்சிவத்துரோகம்பிடித்தலைப்ப
யாகைதானவர்ககியந்துமாசுணபடங்கிழிக்குந்
தோகைகோம்பியாற்சுழல்வதொத்திரதுதலைந்து
போகயான்முதலெந்தையாலியற்றவும்போமோ. உ௬

வேறு.

வேதநெறிக்கடங்காதபாவமியான்போக்குவனென்விதியிற்றீராப்
பேதமுறுபாவமெல்லாமாலொழிப்பனகளுலம்பிரியாப்பாகந
தாதவிழ்கொன்றைச்சடையான்போக்குவிப்பனவனருளாற்றவிராப்பாவஞ்
சிதரனூர்தம்மாலுமெம்மாலுமெவராலுந்தீரகொளுதால். உ௭

ஓாதகோகத்திபிரமகத்திகிரிகத்தியொன்றென்றேற்றஞ்
சாராதகுருத்துரோகஞ்சனத்துரோகஞ்சாமித்துரோக
கோரோகவொன்றிலொன்றுநூறுமடங்கதிகமிவைநீங்குமேனூந்
தீராததீராதசிவநெறியிற்பிழைத்தவர்தஞ்சிவத்துரோகம். உ௮

என்றுதிசைமுகனுரைத்துநின்றமுறையிடுவாரேருக்கிரங்கிட்பின்னுந்
தொன்றுசேரகிலாண்டத்துள்ளசிவாலயங்களெல்லாந்தொழுவீர்ஙி
லன்றுபோமுமதவினையல்லதெனில்லைகான்முண்டனவகளுனை
லொன்றுசெயத்திருமெனத்தோகையுணர்த்தியகைவினவுணர்த்துகின்றான். உ௯

வேறு.

பூதலமேலோசனையோரிலக்கம்பாறுப்புதமதியோரிலக்கமுடுமேலொன்றுகு
மேதைபுகர்செவ்வாய்பொன்சவுரிதானமேனமேலேயிவ்விரண்டா விளங்கித்தோ
ன்று, மாதிமுனிவோரெழுவர்தானமேலொன்றப்புறமோரிலக்கமென்பார்,துருவதா
ன,மேதினியிலிருந்துபுவலோகங்காறும்விலக்கரியதொகைமுறைநிலக்கமாமால்

சுவலோகமிலக்கமெண்பத்தைந்துமேலேசொல்லரியமகலோகமிரண்டுகோடி
கவமேவுசனலோகமிருநாறகோடிநண்ணுதவலோகமும்பன்னிரண்டுகோடி
யிவைமேற்சத்தியலோகமீரெண்கோடியெம்பதமுக்கோடியரிபதமுக்கோடி
சிவலோகநாற்கோடிபித்திகோடிசெப்புதொகையுலைக்கிலம்பான்கோடிபார்மேல்

பூதலத்துணைக்கனமிலக்கமென்பாரும்புயங்கமெட்டினுஞ்சேடனுமென்கணிறுங்கிழக்
கு, மாதலத்தைத்தாங்கிநிற்குமதனைக்கீழ்க்கோடிமற்றிருபானிலக்கமாடகர்தங்கோ
யின், மேதகுபன்னகராக்கரவுணர்சூழ்வோர்விடுத்ததலமுதலேழுமேழொன்பானு
ஞ்,சோதிபெறுகூர்மாண்டர்பதங்கீழொன்பான்றெண்ணூறறொன்பானிலக்கமதனை
க்கீழ்ச்சம்பி. க௨

இருணிலமுமெழுநான்குகோடியாகுமிலக்கமிருபத்தொன்பானகீழதாக, வொருக
மடமிருக்குமிடமொருகோடிக்கீழுயங்குநெடும்புகைப்படலமைந்துகோடி, மருவு
றுமக்கினிச்சுவாலைபதினைகோடிக்கீழ்வயங்குகாலாக்கினியின்வாதர்கோயில், பெரு
குபிதநிகோடியதன்கனமோர்கோடி பெரும்புவிக்கீழுலகமைம்பானகோடியாமா
ல். க௩

வேறு.

போவலைநடுமுதலாநாவலொடுதேக்குககுசைகவுஞ்சமிலவிறலிபுட்கரமேயாகப்
பாவலவர்புகழ்தீவுமேழாகுமுப்புபபாறயிர்நெய்கரும்புமதுநீர்க்கடலேழாகு
நாவலந்தீவோரிலக்கமிரட்டிமேன்மேலுநாலையுபபுமுதலேழுமன்னவேயாகு [யே
மேவுதிலாககடலேழுந தீபமோரேழு மிருகோடியைம்பதினுன் கிலக்கம்யோசனை

சூழ்கனகபூமிபதினகோடியப்பாறசுடர்த்திகிரிவலாயதனைச்சூழாநிற்கும் [க்கம்
வாழ்வளாயினபெருங்கனமோரயுதமாகும்வளைநதபுறக்கடல்கோடியிருபத்தேழில
பாழிருணடபூமிமுபபானைந்துகோடிபதநொனபானிலக்கமுடனயுதநான்கா [டி
மாழ்ககனபிந்நிகையோர்கோடியாகு மருவளாக்குநிலநதிசைதோறைம்பான்கோ

வாசனையைம்பதுகோடிதிசைதோறுன்மகிதலஞ்சூழ்நதாலையங்களவணக்குவீரோ
யோசனையைம்பதுகோடிவானமேலேறியுயர்விடையார்பதம்பரவித்திர்ககினறீரோ
தேசனையைம்பதுகோடியிறங்கிக்கீழ்ப்போய்ச் செறிநதபாதலங்கடநதுகாண்கின்றீ
ரோ, வீசனையரினைத்தொருபாறறவஞ்செய்வீரோவிலைநானகிலுமதுகருத்துயம
பிரானறுன. க௪

மேலானசிவபதத்துனுயர்ச்சிதானுமேதினிவெண்டிசைபரந்தவிரிவுங்கீழமைப்
பாலானபாதலமூநாகினவீறும்படாபுகையுங்கணற்சிகையும்பரிந்துதாவிக்
காலாங்கியுருத்திராக்காணுமாறுங்கருத்திலுனவிநடுநெடுங்கிகரங்கள்கூப்பி
நாலானதிசைமுகத்துக்கமலத்தேனவானினிதொழுதுபுதங்தெளிர்நவில்வதானுர். க௫

முன்னமேவீரணவலிக்குடைநதபேரேனுமுழுதுமேசிவபதத்துமுயன்றுசென்று
வினனமேசிவகணத்தார்பொருதபபரோனமிகதும்வயிரவர்சூலதிடையமாட்டேம்
பின்னர்மேறபுவனிவலம்புரிதலாற்றேம்பிலத்திறங்கியுருத்திராக்காணமாட்டேம்
தன்னமேதனியிருநதுசிவபிரானைத்தவம்புரிநதுகாணும்வகைசாற்றுரென்றார். க௬

வேறு.

வானவருரைப்பச்செநதாமரைமலர்த்தவிசின்மேவு
ஞானநான்முகத்தான்சொல்வானுறறமைபுரியுந்தானம்

பேனமாப்புணரிசூழ்ந்தபெரியபூதலமேயாகு
மானதோர்திகிரிவெற்பினைகமலாற்புறமுமாகா. ௩௯

மற்றையேழ்தீவின்வேந்தர்மனுமகன்விரதனென்பான்
பெற்றசீராங்கிதிரன்பெரியமேதாதிபுட்டு
வுற்றசீர்ச்சோதிட்டென்பானுயர்தருதுதிமான்மற்று
மற்றமில்சிறப்பின்மிக்கவார்வலிச்சவனன்மன்னோ. ௪௰

அவரினுஞ்சம்புத்தீவிலங்கிதிரனுக்குமைந்தர்
புவிபுகழ்பாரதன்கிம்புருடனேயரியேகேதுத்
தவறில்பத்திராச்சவத்தன்றனியிளாவிரதன்மேலு
நவிலிரமியனேபொன்னன்குருவிவர்நவகண்டத்தோர். ௪௧

வீறுசேர்சம்புத்தீபநடுவுறவிளங்குமேருக்
கூறுமாற்றிசையுஞ்சூழக்குலவுநாற்குன்றமப்பான்
மாறிலாத்தென்பான்மூன்றுவடதிசைமூன்றுமேல்பா
லூறிலாவொன்றகீழ்பாலொன்றசூழ்குன்றமெட்டாம். ௪௨

ஈரொண்ணாயிரமேகீழும்பக்கமுமெண்பானான்கு
மேருமேலுயரம்பாதமிகுளவகைகட்காமுஞ்
சேருமெண்கிரிச்சாரொட்டுஞ்செம்பொன்மால்வரையின்சாறுஞ்
சாருமேகண்டமோனபானவ்வகைசாற்றகேண்மின். ௪௩

வடகடல்சிருங்கநாப்பண்வளர்குருவருடமிப்பா
லிடவியசுவேதங்காறுமிரமியவருடமேனைத்
தடவரைநீலங்காறுந்தனியிரணியமாங்கண்டஞ்
சுடர்வரைமேருசூழ்ந்ததிளாவிரதப்பேர்சொல்லும். ௪௪

கந்தமாதனமேமேல்பாற்கடலிடைக்கேதுமாலம்
வந்தபத்திரியேகீழ்பால்வாரிமாலியவான்மட்டு
மந்தமாநிடதத்தென்பாலரிகண்டமேமகூடத்
துந்தியதென்பாலாகுமுயர்ந்தகிம்புருடகண்டம். ௪௫

பனிவரைசேருநாப்பட்பாரதகண்டமாகு
நனிதருமிவையொன்பானினுண்ணும்பத்திரியேகேது
வினியமுப்பதிற்றுநாலாயிரமெனபரோசையாறு
மனையயோசனைகளொன்பானுமிரநாப்பண்மற்றே. ௪௬

தருமமேதருமபாவந்தகவிலாப்பாவமூன்றுங்
கருமபூமியிற்செய்வோர்கள்கதிதருசுவர்க்கம்பூமி
யிருணிலமூன்றும்போகமெய்துவரிவைகண்மூன்றிற்
பொருவருஞ்சுவர்க்கசேடம்பொசிப்பதுபோசபூமி. ௪௭

ஓதியபாரதகண்டமுழுவுவாணிபங்கள்வித்தை
காதல்சேர்வரைவுசிற்பங்கருமத்தாற்கருமபூமி

மீதுறைபவர்க்குநெல்லூண்மேனியுழுழநாலெட்டுக
கோதறுபருவநாளூறுகந்தொறுங்குறையாநிற்கும். ௪௮

கருமசேடங்களுண்பார்கதிகண்மேல்விழைவார்க்கெல்லாந்
தருமமூர்தலமுஞ்செய்யத்தக்கதுகருமபூமி
புரிதவமனேககாலம்போகபூமியிற்செய்வார்க்கு
வருபலன்கருமபூமிவளரொருதினத்தேநல்கும். ௪௯

வேறு.

ஒண்டொடியோர்பாகனிடமுறைப்பினண்டத்துச்சியுருத்திரர்கோயிலதன்கீழாகு
மண்டூர்பிரான்சிவலோகமண்டமூலத்தமர்வதுகாலாங்கியுருத்திரர்தங்கோயின்
மண்டுமாடகர்கோயிலதனமேலாகமகிதலத்தினிருகோடிகீழாமன்னும்
விண்டநஞ்சுண்டதிசையின்கீழ்பாலாகுமேருமேகலைமூன்றில்விமலன்கோயில். ௫௰

வேறு.

பொன்மலையுத்தரத்திலண்டச்சுவரணவும்வடகயிலைப்பொருப்புங்கோடும்
பனமதிலுமளப்பரியவுருத்திரர்நாராயணரும்பதுமதரோரும்
கொனமல்வேற்கந்தர்கணபதிகள்சாரதர்சாத்தர்குழுவினர்ப்பு
நினமலசதாசிவமுந்தெய்வதக்குழாமுமெம்மானிசழ்த்தொழுதால். ௫௧

பொலனிமையமால்வரைக்குவடமேல்பான்மந்தரத்தின்புடைசேர்தென்பாற்
கனனிநெடுங்கயிலைவரைகளிற்கோடிகள்கடந்துககனந்தாவிச்
சென்னிமதியாறணிந்ததேவனையனறிமறறத்தேவரெல்லா
நனனிலைவிட்டிறப்பதுவும்பிறப்பதுவுங்கண்டிகண்டுநகையாநிற்கும். ௫௨

வேறு.

துங்கவடகயிலாயமுதலாவைந்து துருவொனாறதொண்டைவளநாட்டெண்ணான்
கு, தங்குநடுநாட்டிருபத்திரண்டுபொன்னித்தலநூறறுத்தொண்ணூறுமலைநாட்
டொன்று, கொங்கெழுசிங்களத்திலிரண்டுவைகைக்கோதறுதமிழ்நாட்டீரேழுமுத
லாஞ்சூலச், செங்கையார்தலமிருநூறெழுபானுண்கிற்றெச்சணபாற்கயிலாயத்
திருக்குற்றாலம். ௫௩

அம்புவியிலித்தகையாலுரைத்தவெல்லாமாதிதலம்பிறதலங்களனந்தமாகுந்
சம்புநிலைப்பாதகண்டமடநல்லாட்குத்தானீட்டுவடதிசைதென்றிசையேசென்னி
நம்புசிரப்பருப்பதமேசேதுராக்கொங்கைநளினவயற்றமிழ்நாடுவதனமாகக்
கொம்பலர்சூழ்செண்பகாரணியஞ்சூழ்ந்தகுற்றாலமபீடகத்தானமாமால். ௫௪

புவனநெடும்பரப்பெல்லாந்திணையாந்தாகப்பொன்னிமையகிரிவடபாலுறப்போ
சுக், சுவனவனாயிமையமுதற்கனனிகாறுங்கண்டபெருநிலமுழுதுங்கழனியாகுஞ்
சிவனுறைகேதாரமுதற்கருப்பந்தோட்டஞ்செனனிவளநீர்நாடுசென்னற்சாலி. குவ
ளைவயற்றமிழ்நாடுவடித்தபாகுகுற்றாலஞ்சருக்கரைவட்டாகுமன்றே. ௫௫

வேறு.

தர்பனையெம்பெருமாட்டியகிலாண்டசிற்றிலெனத்தனிநின்றூடு
முற்பதியாயுயர்தாணுமாலயபூந்தொட்டிலுககோர்மூலவீடாய்க்

சற்பமெனுங்கடல்கடத்துந்தோணியாய்க்குணங்குறிகள்கடந்தஞானச்
சிற்பரனவாழிடமானபரமரகசியத்தானந்திருக்குற்றாலம். ௫௬

சிறக்குமிடஞ்சிற்பலாக்கும்பரமனுக்குமூவருக்குந்தேவாயார்க்கும்
பிறக்குமிடங்கவுரியறம்வளர்க்குமிடம்பிறந்தோர்கள்பிறவியின்னை
மறக்குமிடம்வடவருவியெனுங்காமதேனுவளர்பால்சுரனைகுங்
கறக்குமிடம்பரகதியேகாட்டுமிடந்திரிகூடககடவுட்டானம். ௫௭

ஆண்டுபதினாயிரமோர்புண்ணியமாத்தலந்தருமபேறனைத்துங்காசி
கூண்டுதவுமோராண்டிலயனமொனறிற்கேதாரங்கொடுக்குங்காஞ்சி
பூண்டுதவுமிருமதியிலொருமதியிற்பெரும்பற்றப்புலியூர்நல்குஞ்
சேண்டருமெய்ப்பயன்களெல்லாமொருநாளிற்கொடுத்தருளுந்திருக்குற்றாலம்.

வேறு.

தாய்பசிக்கத்தந்தைபசித்திருக்கக்காண்போர்தங்கள்சுற்றமனங்கொதிக்கத்தாங்கள்வாழ்வோர், செய்பசிக்கத்துடிக்கவிருந்துண்போர்தாரஞ்சிறையிருத்திப்பரதாரம்விரும்பிச்செல்வோர், வாய்பதைத்துப்பிறர்குடிக்குதீங்குசொல்வோர்மன்றிருந்துவழக்கோரஞ்சொல்வோர்பொல்லா, நாய்வளர்த்துக்கொலைபுரிவோர்பாவமெல்லாநன்னகரேதவிர்க்குமெனுமிருக்குவேதம். ௫௯

அடுத்தார்க்குநன்றுசெய்யாரிடுக்கண்செய்வாரநதணரையுயிர்செகுத்தாராவைக்கொன்றார், கொடுப்பாரையருகிருந்துதடுப்பார்கற்பினகுலமாதர்வரம்பழித்தார்குருவைப்போற்றார், கெடுப்பார்க்குத்துணையாவாரறஞ்செய்வார்க்குக் கேடுசெய்வார்பாவமெல்லாங்கிரிக்கோதண்ட, மெடுப்பார்க்குவளம்பதியாந்திருக்குற்றாலமிமைப்பொழுதிலொழிக்குமெனுமிரண்டாம்வேதம். ௬௰

அன்னமிட்டார்தமக்கிரண்டுநினைகின்றரு மடைக்கலத்தைவயிறெரியத்தொடுகின்றாரும், பின்னமிட்டுக்கிளைக்கூட்டம்பிரிக்கின்றாரும்பெரியாரைப்புறம்பழித்துப்பேசுவாருங், கன்னமிட்டுக்களவாடிக்கள்ளுண்பாருங்காமத்தாலழிவாருமெய்துபாவ முன்னவர்க்குமுன்னவர்குற்றாலமென்றுமொழிந்தாலுநீருமெனுமூன்றாம்வேதம்

உலகிடத்துத்தொலையாதபாவமெல்லாமுயர்தருபுண்ணியதலத்தொத்திரவேண்டும்
பலபலபுண்ணியதலத்துந்தீராப்பாவம்பரமனுறைசிவதலங்கள்பரவத்தீரு
நிலகமெனுஞ்சிவதலத்துசென்றார்பாவநீருமேதீராதுசிவத்துரோக
கலமலிசீர்த்திரிகூடத்திருக்குற்றாலநன்னகரேதீர்க்குமெனுநான்காம்வேதம். ௬௨

வேறு.

இன்னபடிமறைநாலுந்துறைதோறுமுழங்குதலாலிமையோர்நீவிர்
மன்னகர்ச்செண்பகவனத்துச்சென்றுதவம்புரிந்துமதுநவைகடந்து
சின்னமதிபுனைவேணிச்சிவபிரானதிருவருளாற்றெய்வக்காவும்
பொன்னுலகுமும்மையர்பாறபுதுநலமும்பெறநுமூற்றும்பொலிவீரென்றான். ௬௩

விண்ணிறைசதுர்முகத்துவேதியனீதுரைத்தருளவிடைகொண்டேகிக்
கண்ணியவாறுரைத்ததனுறகளிகூர்ந்துகளிச்சுரும்பின்கணம்போல்வானோர்

மண்ணிமணியலைகொழிக்குங்கடல்வாவிக்குவலையமாமலர்ந்தபூமேற்
புண்ணியமாமதலூறியுவட்டெடுக்குந்திரிகூடப்பொருட்டிற்சேர்ந்தார். ௬௭

பிரமனைக்கண்டுறுதிபெறும்பேறுரைத்தாந்திரிகூடப்பிறங்கன்மேலாச்
சிரமமிசைத்தவம்புரிந்தசிவத்துரோகந்தவிர்ந்துதிங்கள்சூடும்
பரமனைச்செண்பகவனத்திற்பண்ணவனைக்கண்டுபதம்பரவிவானோர்
புரமனைத்துங்குடியேறக்கரையேறுமகிமையினைப்புகறல்செய்வாம். ௬௮

௰௫-வது. தேவர்கள் சிவத்துரோகமடைந்தசருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௬௱௬௰.

## ௰௬-வது. தேவர்கள் சிவத்துரோகந் தீர்ந்தசருக்கம்.

வற்றாததேனருவிவானருவிமான
நற்றாலமேவுதுறையாடிநனிவானோர்
குற்றாலமேயதிரிகூடமிலைசவந்தார்
பொற்றாலமேல்விளைவுபுந்தியிலொழிந்தார் ௧

விண்பகவுயர்ந்தகிரிமேவுசிலையெல்லா
மெண்பகரிலிங்கவடிவென்றதுசெயித்தார்
செண்பகவனத்ததனையதெதிர்கண்டார்
வண்பகல்செய்கற்பகவனத்தையுமயர்த்தார். ௨

கானவாகனைலகானிலெதிர்மேவித்
தானவனையீறுபுரிசாரதனையெய்தி
ஞானவனையோகியாகணண்ணுகுகைநண்ணி
யேனவர்கண்மாதவமியற்றுமிடைசென்றார். ௩

வேறு.

சாதகில்குரவவேலிச்சண்பகச்சோலைசார்ந்து
புாதியினைமகிழ்ச்சிகூர்ந்துபொன்னகரமரர்முன்னு
ளாந்தமார்தக்கன்வேள்வியழலினாற்காயந்தமேனி
மாந்தமாருதத்தினாலேவரவரக்குளிர்ந்தார்மனனே. ௪

பாளையஞ்சடைகள்பின்னிப்பழுப்பிலைக்காவிதாங்கி
நீளவுமொருதாணினறுநெய்யரிச்சீரைசாத்தித்
தாளினீர்சிரத்திலேற்றுத்தவத்தர்யோகியர்கள்போலு
நாளிகேரங்கள்கண்டார்நலம்பெறமகிழ்ச்சிகொண்டார். ௫

கன்னியம்பசியபாளைகமழ்தருபருவத்தெங்கின்
மன்னியகுரும்பைகாய்த்துமழைமுகில்பொதிந்ததோற்ற
மன்னியவுலகிற்றெய்வவாடவர்வந்தாரென்று
துன்னுபார்மடவார்கொங்கைதுகிலினான்மறைத்தன்மானும். ௬

புண்ணியதருக்களாகப்போவிந்தபூஞ்சோலைவேலித்
திண்ணியகதலிநின்றதென்றலாலசையுந்தோற்றம்
விண்ணினிலரம்பைமாரைவேட்டவர்வந்தாரென்று
மண்ணினிலரம்பையாலவட்டங்கள்சுழற்றன்மானும். ௭

துருக்கமாமலரில்வீழ்ந்தசுரும்பினநறவமாடி
மருக்கமழ்தாதினாலேவடிவுவேறமைந்ததோற்றந்
திருக்கிளர்தழலின்மூழ்கித்திருநாளைப்போவார்மேனா
னுருக்கிளர்சைவத்தெய்வவுருவுபெற்றெழுந்ததாமால். ௮

பணமலர்துளிக்குந்தேறல்பைம்பொனுடலித்தேமென்னுங்
கொன்மலிதாரையன்றிக்குளிர்மழைத்தாரைபோலுஞ்
சண்மலிச்சினைகடோறுஞ்சண்பகமலர்கள்வானம்
பொன்மழைபொழிவதனைநேர்ப்பூமழைபொழியுமாமால். ௯

இலவிதழ்விரியுந்தோற்றமிவர்கொலோதக்கன்வேள்வி
நலனவிநுகர்ந்தாரென்னநவிலவாய்திறத்தல்போலும்
புலனுறவடைந்தார்தம்மைப்புறஞ்சொலத்தகுமோவென்ன
வலருமாதளிர்களையாலமைந்துவாய்புதைத்தனமானும். ௰

தேவர்கள்வந்தாரென்னச்செண்பகவனமாங்கன்னி
மாவடுவிழியாரொக்கமுருக்கின்வாட்மலர்நறுமுல்லைப்
பாவனைமுறுவல்பூத்துப்பாடல்வண்டிசையாலேத்தி
யாவல்சேர்தளிர்க்கைப்பூந்தேனருக்கியமளித்ததன்றே, ௰௧

கண்டனனமரர்வேந்தன்கண்களாயிரத்தினபேறு
கொண்டனனியானமராட்டங்கொண்டபேறமைந்தார்பின்னோர்
தண்டலைக்கமுகவேலிச்சண்பகவனச்சீர்நோக்கி
யண்டர்தங்குரவன்வாய்மையாயிரத்தொன்றேயென்றார். ௰௨

பூவின்மேல்வண்டோடாப்புதியசண்பகக்காவெங்குந்
தேவரோபூவின்மேவிச்செழுந்தவத்தேனையுண்டானார்
மூவராய்ப்பரமமூர்த்தமுத்தொழில்புரியுந்தானம்
யாவரோவலஞ்செய்யாதார்யாவரோதவஞ்செய்யாதார். ௰௩

கந்தருவருடஞ்சேர்ந்தான்கமழ்புனற்கிறைவன்வாரி
யிந்திரதுவைச்சார்ந்தானிந்திரனெழிற்பூஞ்சோலை
மந்தமாருதத்தைச்சார்ந்தானமருத்துமாமுனிவர்வேள்விச்
செந்தழலதனைச்சார்ந்தான்செழுங்கனற்கடவுளாமாதோ. ௰௪

அந்தகன்றருமவேடமாகினனிருதியாவான்
முந்துவேட்டுருவமானான்முந்துதவம்புரியுமேனைத்
தந்திரர்யாழோர்சித்தர்தவத்தர்கிஞ்சையர்புத்தளிர்
வந்தகிம்புருடர்மற்றோர்வண்மையைவகுத்துச்சொல்வாம். ௰௫

மனிதராய்வடிவுகொண்டுமாக்களாய்ப்புள்ளாய்வாசப்
புனிதமார்தருக்களாயும்புயல்கெழுதிரிகூடத்து
முனிவராய்ப்புதலாய்ப்புல்லாயமுற்றும்வேறுருவம்பூண்டு
தனிதராய்த்தவங்கள்செய்தார்தானவர்பயத்தான்மன்னோ. ௰௬

ஆலயச்சங்கவீதியண்ணலையுள்ளிவானோர்
நால்வகைச்சங்கத்தோருநளினங்கோமுகஞ்சொத்திகஞ்
சால்புசேர்வீரஞ்சிங்காசனமுத்தஞ்சுகாசனங்கள்
பீலிபத்திரமாமொன்பான்பெரியவாசனத்திருந்தும். ௰௭

ஆறுடற்பகையையோட்டியைம்புலனடக்கி பாண்டு
மேறுநாறகரணங்கட்டியியலுமுக்குற்றமாற்றி
யூறுகால்வளியிரண்டுமொருக்கியோர்வழிகடாவி
மாறிலாயோருநீராற்றவப்பயிர்வளரச்செய்வார். ௰௮

இயமமாசனந்தியானந்தாரணைபிராணயாம
நியமம்மங்கியதிநீண்டபிரத்தியாகாரநிட்டை
யயருமட்டாங்கயோகமுஞானறியுமாறுதாரத்
தியலபெறுபாதண்மூலதத்தமுட்டிமேலாடல்கண்டும். ௰௯

காய்பலதின்றுங்கானிற்கனிபலநுகர்ந்தும்வாவிப்
பாய்புனல்பருகாநின்றும்பச்சிலைசறிந்துங்கல்லிற்
சாய்பசுங்கிழங்கசித்துஞ்சருகினைப்புசித்துந்தாங்கா
வாயுபக்கணங்கள்செய்தும்வசிவறப்பசியைத்தின்றும். ௨௰

சாந்திராயணமுடித்துந்தருதிங்களுபவாசித்து
மாந்தியுமயனத்தோர்நாள்வருடத்திலோர்நாளுண்டுங்
காந்தியின்வெயிலசேர்பஞ்சக்கனலினமத்தியிலேநின்று
நீந்துதலரிதாம்வாரிநீரிலேநிலையாநின்றும். ௨௧

கல்லெனக்கிடந்துநீரிற்கயலெனவாழ்ந்தும்பாரிற்
புல்லெனப்பொருந்தாநின்றும்புற்றெனவளர்ந்துமேனி
வில்லெனவளைந்துமாலினவீழெனச்சடைகள்வீழ்த்துஞ்
செல்லெனக்கலங்குறுதூந்தீயெனப்பயமுறுதும். ௨௨

ஊசிமேலொருகால்வைத்துமொருவிரலூன்றிக்கண்க
ளூசிகாமூலம்வைத்துநன்னிலத்தொருகையூன்றி
யாசுவாய்முடிகிழாகவடியினைமேலாய்நின்றும்
வீசுகைசிரமேறகொண்டும்விடாதுமெய்த்தவங்கள்செய்தார். ௨௩

அப்பரிசமரர்யாண்டிலாயிரப்பதிற்றுண்டெல்லா
மெய்ப்பெருந்தவங்கள்செய்துமெய்யெலாம்வருந்தித்தேம்பிச்
செப்பருங்கவலைகூர்ந்தார்தேவரோயாகிலம்மா
விப்பெருஞ்சிவத்துரோகம்யாவரேதொலைக்கவல்லார். ௨௪

அத்தனைகாலமெல்லாமருந்தவம்புரிந்தமாதி
கத்தனைவிடஞ்சேர்நீலகண்டனைத்திரிகூடத்து
நித்தனைவரவுகாணார்நின்றனர்திகைத்துவாடிச்
சித்தநைந்துலைந்தவானோர்சிந்தையில்வருந்திச்சொல்வார். ௨௫

வேறு.

உருகினோமுடலெலாமுளமெலாமறுகினோம்
விரவினோமனலிலேவெயிலிலேகருகினோம்
வருகிலாரருள்கிலார்மழுவலாருலகெலா
மருளுமோர்பரமனாரருளிலாதவர்கொலோ. ௨௬

வரமெலாமுதவுமோர்வரதனார்கருதலார்
புரமெலாமெரிசெய்தேபுவியெலாநிலைசெயதார்
பரமனாநமதுபால்பரிகிலார்வருகிலார்
பிரமனார்மொழியுமேபிசகுமோபிசகுமோ. ௨௭

வேதமேயிடையறாவேழுமேயுமாசெய்தா
ராகமேயணிசெய்தேயாதிநாளருள்செய்தார்
நாகமேயணிகுவார்நாமெலாமெலியவே
யேகநாயகர்வராரேழையேம்வினையிதோ. ௨௮

செங்கைமான்மழுவினார்செண்பகாடவியினா
ரெங்குமாம்வடிவுளாரெங்குமாம்விழியுளார்
கங்கைவார்சடையினார்கண்டுமேவருகிலா
ரங்கமேபுகழ்ந்துநாமென்றுவானவரெலாம். ௨௯

வேறு.

அவரவர்கண்மனந்தோறுமறிவென்னுஞ்சுடர்தூண்டப்
பவரமர்செஞ்சடைக்காட்டுப்பசுங்கனகத்தனிக்குன்றைக்
கவரமருந்திரிகூடக்கனவரைவாழ்கற்பகத்தைத்
துவரமருநறுங்கனியைத்தோத்திரஞ்செய்தேத்தெடுத்தார். ௩௰

தேவருக்கும்பெருந்தேவேதிரிகூடப்பரஞ்சுடரே
மூவருக்குமுதற்பொருளாய்முளைத்தருளுந்தனிமுதலே
மேவருட்கண்வாரிதியேமேலானகுணக்குன்றே
யேவருக்குமுனையல்லாற்புகலுண்டோவெமபெருமான். ௩௧

ஆயார்க்குத்தோன்றாத்துணையாவாயனைத்துயிர்க்குஞ்
சேயாவாயணித்தாவாய்செண்பகப்பூங்காவுடையாய்
தாயாவாயெமதுரிமைத்தந்தையாவாய்பரவார்
நோயாவாய்பணிவார்க்குநோய்தீர்க்குமருந்தாவாய். ௩௨

மண்ணுடையாய்நீருடையாய்வன்னியுடையாய்மருத்து
விண்ணுடையாய்சங்கெநீதியுடையாய்பாகம்

பெண்ணுடையாய்சென்னிமிசைப்பிறையுடையாய்கண்களின்மேற்
கண்ணுடையாயெங்கடுயர்காணுவாறென்னேயோ. ௧௩

நரிகூடவேடனுக்குநந்தாதபதமளித்தாய்
பரிகூடநரிகூடத்தும்பரமகாரணமூர்த்தி
யரிகூடவயனறியாவண்ணலேயிரங்காயுன்
றிரிகூடங்கண்டவர்க்குத்தீராதவினையுண்டோ. ௧௪

புகழ்வார்க்குநல்குதியோபுட்பகந்தனார்முதலா
யிகழ்வார்க்குங்கதிகொடுத்தாயல்லையோவெங்கோமான்
றிகழ்வார்க்குவினைதீர்க்குஞ்செண்பகாடவியுடையா
யகழ்வாரைத்தாங்காதநிலமுண்டோவச்சோவே. ௧௫

ஈயறியாப்பூந்தேனேயெழுத்தறியாமறைப்பொருளே
காயறியாச்செழுங்கனியேகற்பகத்தின்பசுங்கொழுந்தே
தாயறியாக்கருவிலிருந்தமுதூட்டுந்தாய்த்துணையே
நீயறியாச்செயலுண்டோநிகிலபரம்பரமூர்த்தி. ௧௬

கங்கைதனைச்சென்னிமிசைக்காதலாற்றாங்கியதும்
பங்கயப்பொற்றாள்பரவும்பகிரதனுக்காவன்றோ
சங்கையறநொந்தேமைத்தாங்கவோமானையொரு
செங்கைமிசைத்தாங்குந்திரிகூடத்தம்மானே. ௧௭

அன்றுநரகாசுரனையந்தகனையீடழித்துத்
துன்றுமுலகெல்லாந்துயர்தவிர்த்தாயல்லையோ
வின்றுநீவாராயோவேழையேமெய்துதுயர்
குன்றுந்திரைக்கடலுங்கொள்ளாதுகொள்ளாதால். ௧௮

நஞ்சம்பொறுத்தாய்நகுயாரவெண்டலையின்
வஞ்சம்பொறுத்தாய்மழுவேந்துங்கையுடையாய்
தஞ்சந்திரிகூடத்தாணுவேயெங்கள்பிழை
நெஞ்சம்பொறுத்தருளனின்மேற்கடனன்றோ. ௧௯

நாராயணனுமொருநான்முகனுங்காண்பரியா
யாராவமுதேவருக்கைநிழலம்மானே
வாராயிதுசமையம்வந்தருளிநின்கணருட்
பாராயென்றும்பர்பரதபிக்குமந்நேரம். ௨௰

வேறு.

குளிர்புனற்கொழுந்தும்வில்வத்தழைகளுங்கொன்றைப்போது
மிளிர்மதிப்பிஞ்சுங்காயும்விரிசடைப்பவளக்காடு
நளிர்மறைபழுத்தவாயுநாட்டங்கண்மூன்றும்வானோர்
தெளிர்தரவிடைமேல்வந்தான்சிவதிரிகூடத்தம்மான். ௨௧

வாடியபயிர்கள்கண்டமழைமுகம்போலவாடித்
தேடியவறியோர்கண்டதிரவியம்போலக்கைக்
கூடியகனகக்குன்றைச்சித்திரச்சுருதிமன்றி
லாடியபெருமான்றன்னைக்கண்டனரமரரெல்லாம். ௪௨

கண்டனர்விழியுநெஞ்சுங்களித்தனர்களியாறேற
லுண்டனர்திருக்குற்றாலத்தொருவனைப்பரவிவாழ்த்தி
விண்டனர்பரமானந்தவெள்ளத்தூட்டிளைத்துமேவித்
தெண்டனிட்டாடிப்பாடிச்சென்னிமேற்கரங்கள்கூட்டி. ௪௩

ஒன்றாகியிரண்டுமாவாயொன்றிரண்டாவாய்மற்று
பின்றாகியென்றுமாவாயிலதுளதாவாயெல்லா
மன்றாகியனைத்துமாவாயாதியாயந்தமாவாய்
குன்றாகியணுவுமாவாய்க்குறும்பலாவுடையாய்போற்றி. ௪௪

படைப்பவனீயேயாவும்பரிப்பவனீயேமுற்றுந்
துடைப்பவனீயேமூன்றுதொழிலன்றித்திரோபவங்க
ளடைப்பவனீயேயாவுமநுக்கிரகிப்பாய்நீயே
யுடைப்பெருந்திரிகூடத்தாயுனையல்லாலுலகமுண்டோ. ௪௫

கருவியாய்ச்செயல்களாகிக்காலமாயிடமாய்ச்செய்யும்
பொருள்களாய்ப்புரிவாராகிப்புவனபோகங்களுஞ்செய்வாய்
மருவியேகலந்துநிற்பாய்மற்றரியவைகளெல்லா
மொருவியேபிரிந்துநிற்பாயுனையாருணர்தற்பாலார். ௪௬

காணவுந்தொழவுந்தொண்டர்கருதவுந்திரிகூடத்துப்
பூணவுமுரியாய்நின்னைப்புலப்படத்தேடிக்காணச்
சேணதோநிலமதோயோசவபயதோகறப்பதேயோ
வாணதோபெண்ணதோவென்றறிந்திலமலர்களின்னம். ௪௭

அரும்பியபொருள்களாவாயலையுமாவாய்பணைபர்
தருப்பெனிற்றரும்புமாவாய்த்தணனிற்றணுவுமாவா
யிரும்பெறுமணத்தார்காணவெளியையோதிரிகூடத்துத்
திருந்திழைபாகாவேகாசித்திரக்கூத்தாவென்றார். ௪௮

வேறு.

நின்றுபுகழ்வானவரைத்திரிகூடப்பரன்கருணைநிறைந்துநோக்கி
யொன்றுபெருமாதவமுஞ்சோத்திரமுமினிதுவந்தோமுமக்குவேண்டும்
வென்றிவரங்கேளென்னவருளுதலுமங்களுச்சும்மேனின்றுயை
யென்றுமெழுதாவேதமன்பருக்கேயாம்பனவிசைப்பதென்றோ. ௪௯

முன்னாளிலுனையிகழ்ந்துசிறுவிதிமகத்தடைந்தமுறாலன்றே
பன்னுமாசிழந்துபக்கியிழந்துவறுமையிலுற்பவித்தின்றேம்யா
மந்நாளிலமைத்துடர்ந்தசிவத்துரோகந்தனையின்றகற்றல்வேண்டு
மெந்நாளுமெங்கள்பதம்யாங்கள்பெறவேண்டுமெனவிறைஞ்சிப்பின்னும். ௫௰

மதிலினுட்புறம்வலம்வரல்புறம்வலம்வருதல்
விதியினாற்காங்குவித்தன்மெய்த்தோத்திரந்தியான
மெதிரிறைஞ்சுசாட்டாங்கமெய்வலமெனவேழு
மதிகமொன்றிலொன்றுயிரமடங்கெனலாமால். ௨

நகரநாடொருதேயநற்கண்டநற்றீப
மகரவாரிசூழ்புவனமெண்டிக்குவானுலகம்
பகருமன்னராய்ப்புரநதமிவ்வெழுவகைப்பணியோர்
சிகரவில்லியாருறைசிவலோகமேசேர்வார். ௩

கானவேடுவன்கொலையுங்கோமாயுவின்களவு
மானவோடியவலமொருவலமெனும்பிழையு
மேனபாவமுநீக்கியெம்பரமிர்குற்றாலி
மோனமாக்கதிகொடுத்தவாகேண்மெனமொழிவான். ௪

காலத்தாம்பிரக்கனிகள்பர்தாடுதெண்டிரைக்கைக்
கோலத்தாம்பிரவன்னியாங்கொழிதிரைநதிபாய்
ஞாலத்தாம்பிரக்குன்றம்வாரிசந்தமிழ்சுருதி
மூலத்தாம்பிரமன்பெருந்தவக்குறுமுனிவன். ௫

போதனால்விதியாப்பெரும்புடார்ச்சுனபுரத்து
வேதநாயகர்விண்டுவாயிருத்தலான்மேவ
காதனூர்திரிகூடமால்வரையொடுநறும்பார்
மாதராண்மூலையிரண்டெனதிரண்டதுமலையம். ௬

கடக்கும்யாவரும்வடதிசைக்குமூமலான்ஞால
முடக்குநீக்கிடத்தென்றிசைத்தோன்றியமுனிவன்
குடக்குநோக்கியமதியணிவார்திரிகூடம்
வடக்குநோக்கிமெய்த்தவம்புரிதமிழ்மலைமலையம். ௭

இந்தமால்வரைச்சாரலின்சிறுகுடியிருக்கும்
விந்தைவார்சிலைவீரனும்வேடுவன்றனக்கு
மைந்தனும்வலனென்பவன்கொலைத்தொழில்வலியாற்
சந்தனுடவிச்சற்பமாமெனத்தலையெடுத்தான். ௮

வேறு.

செருப்புங்கானமுந்தேய்த்ததிண்காலினன்
பொருப்பினோங்கிவளர்ந்தபுயத்தினை
னெருப்பினீர்பெய்திறத்தினன்செங்கடாய்
மருப்புமானமூறுக்கும்வன்மீசையான். ௯

கைமயுதுங்கொடும்பாவமும்வஞ்சமும்
பொய்யுமோருருக்கொண்டனபுன்மையான்
வெய்யவூனுணத்தந்தங்கண்மேனியுங்
கையுங்காலுமொய்த்தன்னகவடியான். ௰௧

முயலுமான்களுமுரிக்கலைகளுங்
கயலுஞ்சேல்களுங்கானமுஞ்சேனமுங்
குயிலும்வீட்டுங்கொலைத்தொழிலேவடை
பயிலுங்காலத்தின்முன்பயில்பான்மையான் ௰௨

தோயும்வாடையெடுத்துச்சுவடுபோய்
நாயுநாணநடக்குந்தடத்தினான்
காயுஞ்சிக்கலைக்குளிரிக்கள்ளத்தான்
பாயும்போர்க்குப்பதுங்கும்புலியனான். ௰௩

கோபமின்றிச்சிரிக்குங்கொடுங்கணன்
நீபமென்னவெரிசிகைப்பங்கியான்
றூபமாகியெழுமுயிர்த்துண்டத்தான்
பாவமன்றிப்பழிக்குப்பயப்படான். ௰௪

உடலையேவளர்த்தானுண்டுபல்லுயிர்ச்
சுடலையேயெனத்தோன்றுமுதரத்தா
னடலையேயெனுநஞ்சுறைநெஞ்சினான்
முடலையெயறியாமுழுமுண்டத்தான். ௰௫

மாலுமென்றலுஞ்சேர்மலையாசலங்
கோலுநீள்வரைக்கொல்லிமயேந்திர
[illegible]விலங்கொடும்புள்ளெலாங்
காலத்தோறுங்கருவறுத்தானரோ. ௰௬

அங்கண்வேட்டமெய்தாதயல்சூழ்வரை
யெங்கும்வேட்டம்புகுவதற்கெண்ணியே
மங்குல்வேட்டமலையத்துளார்க்கெலாந்
தங்குவேட்டமெனப்பறைசாற்றினான். ௰௭

வெள்ளிவாரத்தில்வேலனைமுன்புகூஉய்த்
தெள்ளிதாம்வரைத்தெய்வதம்போற்றுபு
துள்ளியாடித்தொழுதுவணங்கெழூஉ
தள்ளியேதனைவனமாதியா. ௰௮

முதுபுனத்தினையுமுளைத்தோரையு
மதுவுங்கந்தமுமற்றவுங்கொண்டவன்
சுதுமெனச்சுனைமூழ்கிக்கடிகமழ்
புதுமலர்ப்பெய்துபொங்கவிதூவியே. ௰௯

பலியேத்திப்பலிவைத்தசேடமும்
வரவிசேடமுஞ்சொல்லிவழங்கலும்
விரவுநல்லநிமித்தெனவேடர்கோன்
சுரவுதாங்கியொடுதொடுதோலிட்டான். ௨௰

தம்மலைக்குரியானவனுதலால்
வெம்மலைப்புறவேடுவர்யாவருஞ்
செம்மலைப்புடைசூழ்ந்துசெருமினர்
கைம்மலைக்குலங்கார்மலைசூழ்தல்போல். ௨௧

ஆங்குநின்றவர்க்காதிமுதியவன்
வீங்குபல்குரலாகதைவிளித்தலுந்
தீங்குகாட்டியசேதமென்றான்மறுந்
தோங்குமாக்கமென்றான்மற்றொருவனே. ௨௨

வேறு.

பரிசையுடைவரியதழாற்பரியபுலிப்போத்தானு
னரவுரிகண்முதலசக்கியடற்கூளியெனநின்றான்
சுரிகையெனும்படைதுளக்கியிடிமனெனத்தோன்றினான்
கரடியுரிக்கஞ்சுகத்தாற்கார்மேகமெனப்பொலிந்தான. ௨௩

வளைதடியர்வளைகோட்டுப்பகடுபோன்மருங்கேற
முளைதடியர்மூரிமருப்பிரலைபோன்முன்னடப்ப
கொளையுடுத்தகொடுமரத்தர்வரையாட்டினகுலமேயப்பத்
திளைதிளைத்துநடுவொருமோர்சிங்கமெனத்தோன்றினன, ௨௪

ஆளெழுந்ததிரண்முழக்கமலைசுருட்டுங்கடலேய்ப்ப
வாளெழுந்தவயப்படைகண்மகரமச்சநிரைமானத்
தூளெழுந்தபடலம்போய்ச்சுடர்மறைப்பப்படரிருளால்
வேளெழுந்துதன்கரியாமெனத்திகைப்பவெளிக்கொண்டான். ௨௫

வேறு.

தனிரிலையுமோலைகளும்பாளைகளுந்தானையராய்க்
கிளைகிளைவல்லயந்தரித்துத்தருக்குலம்போற்கிட்டினு
ரிளையர்காளையராயவிறவுளரும்வனசரரும்
பளையர்களுஞ்குனர்களும்பறமபருங்கிராதருமே. ௨௬

வேறு.

கொடிபிடிப்பக்குழல்கொம்புதொண்டகத்
துடிமுழக்காதுவைத்தெழுஞாளிகள்
செடிகள்சுற்றுபுவாடைதெரித்தெழுத
நடமெடுத்துவலைஞர்பினசாரவே. ௨௭

சென்றுகாணுஞ்சிலம்பும்பதுக்கையுந்
துன்றுசாரலுங்குரலங்கானமும்
குன்றும்யாறுங்குவடும்வளாகமு
நின்றுமோடியுநீடினர்தேடினார். ௨௮

காடுமுற்றக்கலைத்தெழுவார்சிலர்
மாடுசுற்றிவலையெறிவார்சில
ரூடுபற்றியொடியெறிவார்சிலர்
கோடுபற்றிக்குமுறிநிற்பார்சிலர். ௨௯

வேடுபாய்வருமுவையைவேழத்தின்.
கோடுசாய்தரக்குத்துவர்மேல்வரை
யாடுபாய்வரைபாய்வர்சூகர
மோடுபாய்வர்முயன்மறித்தோடுவார். ௩௰

அழுங்குகிரியணில்கவுதாரிபுள்
ளொழுங்குகாடையுடும்புபுல்வாய்கலை
யெழும்புநாய்கலைதேறியதிச்செல்லாங்
கழுந்துபோல்பவர்கைசெயுஞ்சுழல்வாய். ௩௧

நீலமொன்றியகுன்றினைநீள்சரற
காலமேகம்வளைந்தெனக்கானராத
தூலமொன்றியமெய்யெங்குஞ்சுற்றலா
லோலமென்றதோர்மும்மதவோங்கலே. ௩௨

தந்திகூப்பிடச்சக்கரத்தானென
வந்தெதிர்ந்தனன்வென்றிவலனென்பான்
முந்துதாவிமுன்னேகினர்யாரையு
மந்தமாசுணமள்ளிவிழுங்குமால். ௩௩

கட்டுநாகங்கரமெனநேமியாத்
தொட்டவாளியிறைறெருலைத்தானையை
விட்டமாலின்விடுத்தனனீனவ
னிட்டகார்தலைவிட்டதுமென்னவே. ௩௪

வல்லைபாநதனினைவிட்டபின்வாரணஞ்
செல்லும்வேடனாச்சிறிதுதூரந்ததால்
வெல்லும்வல்விடமீட்டசகாயனைக்
கொல்லவேகுங்கொலைவரிவேங்கைபோல். ௩௫

ஆனைதாக்கலுமாங்கெதிர்ந்தான்வல
னேனைவேடரிரிந்தனரோகினர்
தானைவேந்தைச்சமரில்விட்டோடிடுஞ்
சேனையேயன்றித்தெவ்வருமவேண்டுமோ. ௩௬

சோனையொத்தகடுசரமாரியால்
வேனில்விட்டெனவேழம்விட்டேகலும்
வானிறைத்துவெறித்ததுமான்வே
தாளொருத்தனுஞ்சாபமுமாய்நின்றான். ௩௭

சேணில்வேடரைத்தேடலுங்காண்கிலா
னூணிலாமலொருபகல்வெம்பினான்
வீணிலோரும்விலங்குபுட்காண்டலும்
பாணமொன்றிலன்பற்கறித்தேகினான். ௩௮

கானமெங்குமுழந்தொருகார்முயல்
கூனவிற்றுணிலாகக்கொலைசெய்தான்
வானவேவெவ்வன்பசிக்குண்ணவே
யூனைவாட்டவுறக்கனற்காண்கிலான். ௩௯

கொம்புதேடிக்கடைந்துகொடுங்கனல்
வெம்பவீழ்த்தலும்வெண்[illegible]டர்முனம்
பம்புதாளிபுடைநதெனப்பாய்ந்தொரு
சம்புவூனைக்கவர்ந்ததுதாயதே. ௪௰

சம்புவோடித்தசைதனைக்கவ்வியே
சம்புநீண்மரக்காவுந்தனிவரைச்
சம்புவோடையுஞ்சாரலுந்தாவிப்போய்ச்
சம்புவாழ்திரிகூடத்தைச்சார்ந்ததால். ௪௧

ஓடவோமடப்பவக்கடனீந்தவோ
ரோடமேறுதல்போலுயர்மேற்கதி
கூடவோர்வழிக்கூடுதலாய்த்திரி
கூடமால்வரைச்சாரலிற்கூடினான். ௪௨

வேறு.

அனையவூனைவேறமைத்தபின்வினைபிறிந்தகன்று
தனையும்வேறறப்பிரித்தவனுமெனத்தனித்தான்
வினைபிரித்தபின்சம்புவைத்தொடருமெய்யனைப்போற்
றுனைவினூன்கவர்ந்தேகியசம்புவைத்தொடர்ந்தான். ௪௩

ஊனைநோக்கலனுறுபசிநோக்கலனுடலின்
சோர்வுநோக்கலனடித்தமுட்கடித்தருமுழைகம்
பார்வைநோக்கலனிகலன்மேற்பார்த்தகண்பறியான்
பூர்வநாடியுண்ணோக்குமோர்யோகியேபோன்றான். ௪௪

உரியுடற்பொறிமாசுணம்வாய்ப்படுமதம்பாய்
கரியைமீட்டவனைகைப்படைதொலைந்தகாலத்து
நரியின்வாய்த்தசைமீட்கவும்வலியினைநினைவான்
பரியகூசையைவெல்லுமேகாசமும்பகலில். ௪௫

நிவந்தகானெல்லாநேடியுமோடியுநதவித்தங்
கவர்ந்தவூனைவாய்விடுக்கிலநரியுங்கரங்கால
சிவந்தமெய்யெல்லாங்கருகியும்வேடனுந்திரும்பா
னுவந்தவூன்பொருட்டியையுமதித்திடாருலகோர். ௪௬

துடாவனெட்டுமவன்வாடுமவனோடுமவன்றுடிப்பன்
படபடத்துடல்சோருவன்பொறியெழப்பார்ப்பன்
குடர்கொதிப்பதும்பார்க்கலனிகலன்மேற்கொதிப்பான்
மிடல்குறித்தபினறமதிடர்பார்ப்பரோவீரர். ௪௭

முன்புதெவ்வர்தந்திறையின்மேற்றிறைகொளுமுனைவன்
பின்புதானைவிட்டேனைவிட்டோரிபின்பெயர்வா
னின்பமெய்துநாளின்பமேலின்பமாமெவர்க்குந்
துன்பமெய்துநாட்டுன்பமேற்றுன்பமேதுடரும். ௪௮

விரைவிற்சம்புவைத்தொடர்தலால்வியனதிரிகூட
வரையைக்கண்டனன்வரைபொருகடல்வடவருவித்
திரையைக்கண்டனன்சித்திரநதிப்பெருந்தீர்த்தக்
கரையைக்கண்டனன்பிறவியங்கடற்கரைகாண்பான். ௪௯

இருவலம்புரிநந்தனவனம்புகுந்திமையோர்
தருவலம்புரிசண்பகத்தண்டலைதாவித்
திருவலம்புரித்திரளொடுசித்திரநதிசூழ்
வருவலம்புரிமறுகுசூழ்ந்தன்னவ்வினைமறுக. ௫௰

கிளருமுத்தலையருவிபாய்முத்தலைக்கிரியின
வளருமுக்கணாமுதுறைகோயில்சூழ்வரலா
லுளரும்வெம்பசியொழிந்ததுபகைமையுமொழிந்தான்
றளரும்வெவ்வினைதணந்தபோலிகலனைத்தணந்தான். ௫௧

தணந்தீதத்தமதிடங்குலாய்முடிவின்மாதவரும்
வணங்கமானமேறகயிலையிலேகிவல்வேட
னணங்குபாகர்மெய்யருளினாற்சிவகணமானா
னிணங்குசம்புவுங்கிங்கிரனெனப்பொலிந்ததுவே. ௫௨

தலைவர்சங்கமாமறுகினைவலம்வருதவத்தார
சிலைவலவேடனுஞ்சம்புவுஞ்சிவகதிசேர்ந்த
நிலைமைகூறினன்சூதன்மாதவர்க்குமேனிகழ்த்து
முலைவில்யானைசெய்பூசையையாசையாலுரைப்பாம். ௫௩

௰எ-வது வேடன் வலம்வந்த சருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௬௰௫.

---

## ௰அ வது-யானைபூசித்தசருக்கம்.

மூன்ற 0 மெண்வகைப்பத்திசித்தியமுந்தன்மூன்ற
லேர்தசத்தியாலாகமவிதியினலரனை
மாதிரத்தினல்வருபுனல்போதுமற்றவையாற்
புநிலைவத்துமுக்குறியினிற்புரிவதுபூசை. ௧

உந்தமெய்ந்நெறியறிகலாவடுகொலைவேழ
மிந்துவார்சடைநன்னகரிறைவனையோர்நாள்
வந்துபூசனைபுரிந்துநற்கதிபெறுமகிமை
சிந்தையனபினுறகேட்பவருயர்கதிசேர்வார். ௨

அருமைப்பேடைகண்களிப்புறக்கண்மயிலகளும்
பெருமைக்காரொனும்பருவமுகைகுருகிளம்பெடைக
ளொருமைச்சேவலினூடலுககூடலகூறகுளிரும்
பருமைக்கூரல்விடைவிடாதனறில்சேர்பனியும். ௩

பாகுதண்கயப்பங்கயத்தலர்முகம்வாட்டுந
தாங்குசெபினபனிக்காலமும்வணடுதாலாட்டத
தூங்குசிரிளவேனிலுநதுலைநடுசசுடரோன
வீங்குவெய்யிலவாளவிதிர்த்தெழுநததுமுதுவேனில். ௪

பாருமண்டமும்படர்கதிர்தேறுதலாற்பரவை
நீரும்வெம்மைநீரினைவேட்டுநின்றுறகு
மூருலாவுசண்மதியுமோாமதியைவேட்டுருகுங்
காருங்காரினைவேட்டுடல்விளாக்குமோர்காலம. ௫

தள்ளுதெண்டிரைப்புலவுநீர்சலவியுநிலமேல்
வெளளிவீழனக்கார்துளியாமையால்வெதும்பிக்
கள்ளிபாலறபபொரிகததுகரிநததாவரையும்
வள்ளியோர்கொடைமறநதிடிநகயவரோவளர்பபார். ௬

வருந்துகானிடைவானிடைச்சுழல்வனபருநது
பருநதினீழலிலொதுங்குவவிரிபணபபாநதள
கரிநதபாநதளினபடநிழலொளிப்பனகருபபை
பொரிநதகானொரிதளிரொனபபுருவணபுனமான். ௭

மத்தியானமொத்திரவினும்வெதுப்பும்வனகோடை
மத்தியானபல்லுயிர்களைவிடுககுமோமதம்பா

---

0 எணவகைப்பத்தியாவன சிவபூசையின்மகிழ்தல், சிவபத்தர்பூசைசெய்தல், சிவார்ச்சனையியற்றல், சிவபணிவிடைபுரிதல், சிவசரிதைகேட்டானந்தபாஷபம் பொழிதல், அதனறைபுளகாங்கிதமுறுதல, அதனைப்பல்காறசிந்தித்தல், திருப்பணிப்பொருளையபகரியாமைஎன்பனவையாம்.

மத்தியாயருந்தோலதாய்த்தூங்கலாமசல
மத்தியாயருந்தோலதாய்த்தூங்கலானதுவே. ௮

இன்னகாலையிற்பன்னமுமிலைபெறுதிரங்கிப்
பன்னகாதுகள்போற்பவனுசனம்பழகித்
துன்னுநீரெனவானலைகானலைத்தொடர்ந்து
தன்னமாமெனச்சுழன்றதோர்முழுமதச்சயிலம். ௯

கடவுதிக்கெலாங்கனலவதிபுனலெனக்காட்டித்
தொடர்தரத்தரவகன்றுபோயததொலைதருங்கானல்
வடவரைச்சிலைவரதனைப்பொருளெனமதியா
துடலும்பொய்யினைமெய்யெனுஞ்சமையமொத்ததுவே. ௰

பருகநீரின்றியுணவின்றிக்குஞ்சரம்பசியா
லுருகுதாகத்தாலுலகுமுன்னூழிநாட்புரந்த
தருமம்போலவந்தடுத்ததுசண்பகத்தடங்காக்
கருதுமெய்யின்முன்பொய்யெனமறைந்ததுகானல். ௰௧

பற்பவாவியுநதிகளும்வறந்துபாருலகிற்
பற்பலகாவெலாமுலர்ந்தகாலமுங்குளிர்பயிராய்க்
கற்பகாடவிநிகர்த்ததுசெண்பகாடவியே
கற்பகாலமுந்தானழியாதனைக்காட்டி. ௰௨

கானவாரணம்பேடைசேர்பதுக்கையுங்கமஞ்சூற்
கூனவாரணவாவியுங்குளிர்மரக்காவு
மோனவாரணங்கார்பயின்முத்தலைப்பொருப்புந்
தானவாரணங்கண்டதோரதிசயந்தழைப்ப. ௰௩

அடுத்திடச்சுடுங்கடுவெயிற்கானம்விட்டகன்று
மடுத்தடங்குளிர்செண்பகப்பொதும்பரில்வரலுந்
தொடுத்தசூக்குமமெய்துபுதூலமாஞ்சுமையை
விடுத்தவாவிபோலயர்வுயிர்த்ததுமதவேழம். ௰௪

முன்னெலாம்பசிக்குலைந்ததோர்முழுமதவோங்கல்
பன்னெடுங்கவிப்பாணனூர்பாணியைப்பரிவாற்
சென்னிவைத்தவர்திருமுகங்கொடுத்தொருசேரன்
பொன்னின்மாளிகைபுகுந்தெனப்பொழில்புகுந்ததுவே. ௰௫

வாழையிற்குலைமறுகரித்தலையெனத்திருகிக்
கூழைமுக்கிமாங்கனியுண்டுகொழுந்திக்குவைசேர்
பேழையைத்திறந்தெனப்பலவினிற்சுளைபிதிர்த்துத்
தாழைமுப்புடைநறுங்கனிச்சாறுண்டுதாக்கி. ௰௬

ஆசமான்மதமுவட்டுறதுகாந்ததாளசலந்
தாகமானதுகொடுபாதபித்தனுந்தவத்தோர்

போகமேதரும்யோகமேநிகழ்த்ததுபொருப்பின்
மாகமாநதிவருதல்போல்வரும்வடவருவி- ௰எ

தூபம்போர்முகில்படர்வரைச்சுடர்மணிகொழித்துத்
தீபம்போலொளிர்அருவிகாண்டலுந்தழைபேசவிமாத்
தாபம்போய்த்துயர்தவிர்ந்ததுபடிந்தமெய்த்தவத்தோர்
பாவம்போய்விடப்பவத்துயர்பறிபடும்படிபோல். ௰அ

அப்பெலாநுகராவலாற்கரத்துமொண்டருந்தி
வெப்பெலாமறக்குளித்துமெய்ப்புறமெலாம்வீசி
வைப்பெலாம்புகவலையமிட்டிறைத்ததுமதமா
வொப்பில்கோளராமதியையுண்டுமிழ்வதுகடுப்ப. ௰௯

இருமைநாகமேலிந்திரன்வயிரவாளெடுப்ப
வொருமைநாகமேயெனப்புனல்படிந்தயர்வுயிர்த்துப்
பருமைநாகநீள்பணைக்கைமேலெடுத்ததுபடர்கோட்
கருமைநாகமென்றிருமதியொருமதிகலங்க. ௨௰

சுத்தமோர்மருப்பிருபிறைமும்மதநால்வாய்ச்
சித்தகைமந்துடைச்சிந்தூரமெடுத்தெடுத்தேந்தி
முத்தவாரிமொண்டெறியுநீர்நிகர்த்ததான்முழங்குஞ்
சத்தமாமுகிலெண்டிசைப்பொழியுநீர்த்தாரை. ௨௧

கந்தரத்தெழிற்கறையடிக்கவுண்மதக்கலுழிச்
சிந்துரப்பெருஞ்சிந்துரமெடுத்தெடுத்தெறியச்
சுந்தரத்தனதுடல்வழிச்சொரியுநீர்த்தாரை
மந்தரத்தடவரையில்வீழருவியையமானும். ௨௨

மூரிவாரணமுதுபணைக்கரத்துமொண்டெறியும்
வாரிநீர்தொறும்வரையின்மாமணிகிடந்திமைப்ப
நாரிபாகர்மெய்யன்பராநமிநந்தியடிக
ணீரின்மேல்விடுநிரைசுடர்விளக்கினைநிகர்க்கும். ௨௩

தூங்கலாமெனத்துறையில்வீழ்வாரணந்துயர்நீத்
தோங்கலாமெனமதர்த்தெழுந்ததுகிழவுருவாயத்
தேங்கலாரநீர்த்தடம்படிதில்லைவேட்கோவர்
நீங்கலாதபேரிளமைபெற்றெழுந்ததுநிகர்க்கும். ௨௪

குளிர்தடம்புனலருவிதோய்ந்தகன்றகைக்குன்ற
மளியதண்டலைவண்டலைத்துகுத்ததாதாடித்
தளிர்பரிந்துபைம்போதுணவுய்த்தழைபலசிதறி
நளிர்தடஞ்சினைக்கனிகளுநனியுகுத்ததுவே. ௨௫

துறும்பலாபலமறிகலாமதக்கயஞ்சொரிநீர்
நறும்பலாதிபூத்தளிரொலாநன்னதுத்துறைவா

யுறும்பலாயிரவண்டகோடிகளுயிர்க்குயிராய்க்
குறும்பலாவுறைசூழ்கர்பானிறைந்தனகுழுமி. ௨௬

இமிலவாரணமுமிழுநீர்திண்ணனம்பரனார்க்
குமிழுநீரதாய்த்தழையெலாமவன்சிகையுதுக்குங்
கமழும்பூவதாய்ச்சிதறிடுங்கனியவனகனிவா
யமிழ்தமாகமென்றளித்திடுமவிகள்போன்றனவே. ௨௭

கருதுமுற்பவச்சுகிர்தமோசெண்பகாடவிசேர்
தருமமோவடவருவிநீபடிந்தமெய்த்தவமோ
பருமைவேழமுய்த்தனவெலாம்பழமறைப்பலவி
னருமைநாயகர்க்கற்புதமாயினவம்மா. ௨௮

பருகிவிட்டெறிபுனலபிடேகமாம்பனைக்கை
சருகுதிர்த்ததுந்தழையுதாத்ததுமருச்சனையா
மருகிலுக்ககாய்கனிநிவேதனங்களாமயன்மா
லிருவர்பத்திசெய்யொருவர்தம்பூசையாமிதுவே. ௨௯

இருகைமஞ்சனமாகிலுமொருகையாலெடுத்துப்
பருகுதண்புனலாகிலும்பச்சிலைபசும்புற்
சருகையாகிலுநன்னகாபபரமர்தாட்சாத்தி
யொருமையெய்திலார்பேழைதமையாதெனவுரைக்கேன். ௩௰

வேறு.

கவளக்கார்மதவேழங்காவினிடைவைகியநாட்
பவளக்கானமுத்தளப்பார்பாண்டிவளநாடனைத்துந்
திவளக்காய்க்கோடையெலாந்திரிகூடஞ்சேர்ந்தார்கருத்
துவளக்காய்கொடியவினைதுலைந்ததெனத்துலைந்ததால். ௩௧

அறநெறிக்கட்சிவபெருமானருள்போல்முகில்சுரந்து
செந்நெறித்தண்டமிழ்நாடெங்கணும்மாரியும்பொழிந்து
பொன்னுமுத்துந்துறைகொழிப்பவெங்கும்வளம்பொருந்தியதான்
மென்னெறித்தந்தாவளமுமெய்துதந்தாவளமே. ௩௨

திரிகூடபெரியபிரான்சிவபணிசெய்மெய்யடியார்
தரிகூடப்பெரும்புவனந்தனில்வாழ்வுதழைத்தோங்கி
யரிகூடவயனறியாவரன்பதமேசேர்வனென
விரிகூடவிரித்துரைக்கும்வேதவாக்கியந்தழைப்ப. ௩௩

நன்புலத்துமதவேழநனிபோகம்பொசித்தவைமே
லன்புலப்பப்பூதலத்திலநுபவம்விட்டொழிந்தநாட்
டென்புலத்தான்றூதர்வரச்சிவகணத்தாரெதிரேற்றார்
புன்புலத்தின்கொலைவிலங்குபுரிதருமம்யாதெனவே. ௩௪

நடுவன்றூதுவர்வினவநம்பர்களைத்தவர்நோக்கிக்
கடுவன்பானுவைச்சிவந்தகனியாகத்தனிதாவு
நெடுவண்சீர்த்துறும்பலவினைசனைப்பூசனைபுரிந்து
கொடுவன்பாதகந்தவிர்ந்தகுஞ்சரங்காணிதுவென்றூர். ௩௫

அற்பெறும்பூசனைக்கோவிளையாடலருச்சனைக்கோ
நற்பேறுபெறவதெனுநமன்படர்க்குச்சிவகணத்தார்
கற்பேறுங்கொடிபாகனகழல்கண்டோதமைசொரிந்து
முற்பேறுபெற்றுயர்ந்தான்முசுகுந்தனெனமொழிந்தார். ௩௬

எங்குள்ளாரறிந்தறியாதியற்றுகின்றபூசனைக்குங்
கங்கைவேணியரருளேகதிகாட்டுமென்பார்மு
னங்கசாதனமாகவரும்பாவக்கடல்கடத்தும்
வங்கமாய்த்தோன்றியதால்வானிலொருபுட்பகத்தேர். ௩௭

கூறறிஞர்விடுத்தகலக்குஞ்சரத்தைப்புட்பகத்தே
ரேற்றினாரேறுதலும்வேதுசேரிரும்பதுபோன்
மாற்றினன்கரியுருவமாதங்கவுருவானான்
போற்றினன்கயிலையிற்போய்ப்போதநாயகனடிக்கீழ். ௩௮

சென்றடியிற்பணிதலுமேதிருவருட்கண்பார்த்தருளி
யன்றுநமைத்திரிகூடத்தருச்சனைநீபுரிந்தமையா
னன்றுகெசகருணனெனநந்திகணத்தினுமுயர்ந்து
முன்றிலிடைக்கிங்கரர்க்குமுதல்வனெனவாழகென்றூர். ௩௯

மைகொடுக்கும்பழவினைபோய்வளர்பூசைப்பலன்கிடைத்துப்
பொய்கொடுக்கும்விலங்குருவம்புத்தேளாயெவ்வுயிர்க்குங்
கைகொடுக்கும்விடையார்க்குக்கைகொடுக்கும்பணிபூண்டான்
மெய்கொடுக்குந்திரிகூடமகிமையார்விளம்புவார். ௪௰

சிந்தைசெய்யாநரிவேடன்சென்றதேவலமாகத
நந்திசெய்யும்விளையாட்டேதருபூசைமுறையானு
விந்திரனுமேத்தரியதிரிகூடத்தெம்மானைப்
புந்தியுடன்வலம்வருவார்பூசிப்பாரேபெறுவரே. ௪௧

இன்னகரிசெயும்பூசையியம்புதலுநயந்தேத்திப்
பொன்னகமாமிலையவனாபோந்தருளெம்பெருமாட்டி
தன்னருமைப்பெருந்தவமுந்திருமணமுஞ்சாற்றுகெனப்
பின்னருமாதவர்வேண்டப்பேசுவானுயர்சூதன். ௪௨

௰௯. வது—யானைபூசித்தசருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௩௱௰௭.

முதலாவதுதானவகாண்டமுற்றுப்பெற்றது.

சிவமயம்

# இரண்டாவது சிவரகசியகாண்டம்

விநாயகர் துதி

பெருமதத்தினொருகரத்துமாருதமெவ்வுயிர்க்குமுயிர்ப்பிறக்கங்காட்ட
விருகரத்தங்குசபாசமபரமதத்தினிடைவீழாதெம்பவீரந்
தருகரத்துமருப்புவினைத்துரிசறுப்பமோதகக்கைசைவத்தெய்வ
வொருமதத்தின் சுவைநிறைக்குமும்மதச்செண்பகக்களிற்றையுளத்துள்வைப்பாம

## க வது-உமைதிருவவதாரச்சருக்கம்.

தேகமாமன்னுயிர்கள்சுவர்க்காதிபோகமுண்டுசேடமுண்ணும்
போகபூமியின்வரம்புதருமமெனும்பயிர்வளர்க்கும்பொழிற்கோர்வேலி
யோகமாதவாதவத்தினவிளைவுபனிக்காலையமூவுலகுக்காணி
மாகமாகடவுளரும்வரந்துயுநலலறமும்வளரத்தாணி. க

தாருதித்துமணியுதித்தும்பொனபூசதும்புவிமடந்தைதரிக்குமோலி
காருதிகருநதொறுமவட்குவாருதகருங்களபமுலைகலையாட்சசூழந்த
வாரிதிக்குநீருதிக்குநாலுதிக்கும்வலாகடமாமானவேலி
தேருதிக்குமழறகதிரைச்சீதமதியாக்குபனிச்சிகரக்குன்றம். உ

பொனனிலயனகமலபபொகுட்டாகும்பசுநதழையாற்பொதுளுஞ்சோலை
துனனியாறறிசைநிம்பிமால்வளாபச்சால்போலுநதுகிளத்தோய
மனனலாற்பரமறுறைவடகயிலைவரைநிர்க்கும்வடிவமூன்று
முன்னிலுற்பனிச்சிமையவுயாவனைமுத்தேவியருமுறமுமாதோ ௩

வேறு.

அறைகுதிக்கும்வெள்ளருவியையானைமத்தகமேன்
மிறைவருத்துழ்வாளரியெனக்கரியினம்வெருவும்
பிறைவளைப்பெருநதண்டத்துப்பெரும்புயல்வளையைச்
சிறைவிரித்தசிம்புள்ளெனமுழைபுகுஞ்சியம். ௪

யாவரம்பையர்கண்ணினர்நண்ணினரிவளைத்
தேவரம்பையர்பணிவதுசிறுகுடிச்சிறூர்பாற
காவரம்பையில்கனியளிததிமையவர்ககனந
தாவரம்பையின்கனிகொளுநனிகொண்மாச்சயிலம். ௫

சமையமநதரமத்திமதாரம்வண்டிசைக்கு
மமையமநதரத்தசுணமாவலமருமடவிச்
சிமையமநதரததவருறைகுலவரைதெரிப்போ
ரிமையமநதரமென்னலாண்முதல்வரையிதுவே. ௬

வேறு.

மேருவார்மந்தரநிடதவெற்புளார்
பாருளார்திசையுளார்பாதலத்துள்ளார்
ஆருளார்கற்பகச்சோலையார்முதல்
யாருளாரவர்தவஞ்செய்துமால்வரை. ௭

கடும்புலிமுழையிடைக்கலைகள்காறிமிர்த்
தொடுங்குமேயரிகளுங்கரியுமோருழைப
படும்பணிமயிற்சிறையடையும்பானுவு
நடுங்குறப்பொழிபனிச்சிசிரனாட்டினால். ௮

அகலிடம்விசும்புதொட்டழன்றுகாய்கதிர்ப்
பகலவனேர்ப்பரிபச்சையாயது
முகநிகர்மதிக்கலைமுடங்குபான்மையுஞ்
சிகரவெம்பனிவரைச்சீதத்தாலன்றே. ௯

தடவரைத்தென்றிசைச்சார்ந்தவெய்யவன்
வடபெருந்திசையினும்வருந்திச்செல்வது
குடமுறுபனிவரைக்குளிர்பொறுதுபோய்
மிடல்வடவனலின்மெய்வெதுப்பவேகொலாம். ௰

கற்பகமிசைப்படர்காமவல்லிகள்
வெற்பகமெறிபனித்திவலைவேய்ந்தன
நற்பகக்கொடிசசியர்நாணிறகோத்திடும்
பொற்பகிலத்திலக்கோவைபோலுமால். ௰௧

தமையரமடந்தையர்துணைப்பவானவ
ரமையனதோள்பிரிந்தலக்கணெய்துவார்
சிமையமார்தவத்தினாற்சேர்வராதலா
லிமையவர்துதிசெயுமிமையமால்வரை. ௰௨

வேறு.

அந்தமலைக்கரசானனாலானசிற்றுதரக்
கந்தமலைமலர்க்குழலாண்மேனைகாவலன்வானோர்
வந்தமலைபுரிகோட்டுமைந்நாகன்றனைமகவாய்த
தந்தமலைதனைப்பெறுவானெடுங்காலந்தவம்புரிந்தான். ௰௩

அக்கண்ணனொருகண்ணையடிசாத்தவருள்புரியு
முக்கண்ணனமுடிசாத்துமறுகணனன்முளரியந்தான்
மெய்க்கண்ணன்புறநோக்கிவிரதமுயல்வெறபனுக்கே
யெக்கணனுமெய்தாதுதவப்பயனைவந்தெய்தியதால. ௰௪

வேறு.

மனனவணறவமதோமண்ணுறும்வானமு
முனனர்செய்சுகிர்தமோமுதுவெறுப்போர்சுனைப்

பொன்னவாங்கமலமெனபொகுட்டிலின்றதா
ளின்னபேருலகெலாமீனறசெலவியை. ௰௫

சேயிழைக்கவுரியைத்தெய்வப்பஙகயக்
கோயிலிறகாட்சிகண்குளிரக்காண்குற
வாயிரநயனமோவனநதநாட்டமோ
மேயினனறைறநாளிமையவேநதனே. ௰௬

அடுத்தனனுவாமதிகண்டவாழிபோ
லெடுததனன்பொன்னையீனறெடுத்தவாரிதி
கடுததனன்கயிலையார்வாழ்வைக்கண்ணுறீஇக்
கொடுத்தனன்மேனையாங்கொம்பனாள்கையில். ௰௭

வாங்கினள்செல்வியைவாங்கிவாழ்வுபெற்
றோங்கினளபால்சுரநதுகளவார்முலை
வீஙகினள்களித்தனண்மேனைவானெலா
மேங்கினகுரவைகளெழுநதபல்லியம். ௰௮

வேறு.

இச்சைகூரவெடுத்தனண்மார்பணைத்
துசசிம்மாபபபகுநரம்போடியே
கசசைமீறுகனகவள்ளத்தினபால
பசசைவலலிபவளததிறபாரநததே. ௰௯

புவனகோடியைப்போககுவரவெனுங்
கவனவூசலிடடாட்டுஙகவுரியைப்
பவனவானவர்தச்சனபலித்ததோர்
சுவணமாமணிததொட்டிலிட்டாட்டினள். ௨௰

சிலம்புதண்டைகளசில்லரிககிண்கிணி
யலம்புகினறதையனறடிகொமெனக
கலம்புலம்புறவோகடுநதானவா
தலம்புலம்புறவோதவழ்நதாளரோ. ௨௧

இறையளநதபடியிரண்டாறசக
முறையளந்துவளர்ப்பவண்முநதுசெய்
யறம்வளர்நததுபோல்ருண்மாமனப்
பொறைவளர்நததுபோல்வளர்நதாளரோ. ௨௨

வேறு.

வானநாட்டன்னமுமருளமால்வரைக்
கானமாப்பிடிகளுங்கண்டுநாணுறத்

தானமுஞ்சுருமமுந்தவமுஞ்சைவமு
ஞானமுநடைபெறநடைக்குளரோ. ௨௩

சூற்றியபுவனங்கடந்தையும்பேரண்ட
முறறிலுஞ்சிறறிலாமுறையிலாடுவா
ளுறறிலுமமைவதோரினயபுகாட்டவோ
சிற்றிலுமாடினாள்சிமையமுன்றில்வாய். ௨௪

பாவையுங்கழங்குபொறபநதுங்கிளிளையும்
பூவையும்பயிறறுதலபுரிதிசெய்கலாள்
யாவையும்படைத்தளித்தழிக்குஞ்செய்கைதன்
றேவையும்பயிற்றுதலசிநதையுனனியே. ௨௫

வேறு.

பேதையார்பருவந்தனனிறபெருலகுடையாகொன்றைக்
கோதையாசடிலஞானக்கொழுநதையாவத்தான்மேவ
மேதையாவிரதம்பூணடுமேனியார்கருணர்ததமேனி
தாதையாலங்கனம்மாலிததநதையாக்குணாததிருளே. ௨௬

அழகினதுறையுளபோலவாயருநதவங்கூடுமாநின்
மழலைடம்பருவததெனறுவழங்கினனிமவானமுககட்
குழகனைநினைவாககெனறுநினைத்தவைகூடுமெனமுன்
பழமறைகிழவிநோறபபபசும்பொனனூறசாலைசெய்தான். ௨௭

கிலசமாமலைக்குவேநதன்றிருமகளொருபெண்வாலை
மலர்கொடியாள்சுனைபநதாடாள்வலல்பர்குபூறிறகூடாள்
குலமெலாமிறும்பூதெய்தக்கொழுநசவததனிமைபூண்டா
ளுலகெலாம்பரவுமுககணொருவனைததனிமைநீகக. ௨௮

சங்கநீர்படியுநதோறுநதவளமெய்வாணிபோல்வாள
பங்கயாசனத்தின்மேவிறபதுமையைநிகர்வாளகுலச்
செங்கையார்தம்மைநீஙகாச்சிநதையாறகவுரியாவாண்
மங்கைமெய்த்தவஞ்சேர்சிநதைவயிரத்தாலவனாபபெண்ணுவாள். ௨௯

அலைபுனறறடஞ்சேர்நதனனமாகுவாளகூலமேவி
மலைமிசைபபிடியைநேர்வாளவனததிடைநிறகுங்காலை
நிலைமலர்கொம்புபோல்வாணிட்டையிலிருநதாலம்பொற்
சிலையினைநிகர்வாளனறிசசிததிரம்போலவாளனறே. ௩௰

வேறு.

புலன்களைநதையும்பொருத்திநாறகரணமேற்புகட்டி
யலநதுநாறகரணங்களையுள்ளமூடமைத்துப்
பலனசெய்யுள்ளத்தஞானமாம்விழியினைப்பதிததாங்
கிலங்குசோதியைநோக்கிமேற்கண்முகிழ்த்திருநதாள். ௩௧

யேனையாரும்வெற்பரசனும்வியப்பவிண்ணவரோ
டேனையார்தொழுமெம்பிரான்றிருவுளமேற்ப
மோனையார்வமேகொளுகொமபாமுதுதவப்பயிரை
வானையோங்குறவளர்த்தனள்பனிமலைவல்லி. ௯௨

வேறு.

உண்ணிலாவியபேரன்பாலுளமெலாநிரம்பிஞானக்
கண்ணிலானநதவெள்ளக்கடல்பாநதமையமீன்ற
பெண்ணிலாரமுதார்செயயும்பெருநதவப்பெருக்கமேறித
தெண்ணிலாமதியம்வேய்நதார்திருவுளநிறைநததனறே. ௯௩

உடையநாயகியார்செயயுமுயாதவப்பரிவுகாண்பான்
சடையினிமதியஞ்சூடிததடங்கையினமழுமானேநதும்
விடையினர்கயிலையாதவெறபினுறாபொறபினுழிப
படையினர்முதலோர்சூழப்பணிவரைச்சாரல்சார்நதார். ௯௪

வநதவானவரையெல்லாம்வரைப்புறநிறுவித்தாமோ
ரநதணமுதியோராகியணிநதமாமதபோற கூறு
சநதமாநரையுநதோன்றததகைபபொறைசுமநதமேனிப்
பைநதளிர்வாடநின்றுளபணிதவச்சாலைசார்நதார்- ௯௫

சென்றபினெழுநதுதாழ்நதுசிவமறையவரைப்போற்றி
யனறவர்க்கையநனகிருசனத்திருத்தக்கழபோய
நின்றனளிமையபபாவைநேரிழைவதனநோக்க
மனறலநகாதாயமமணிவருநதயதெனனையெனறார்- ௯௬

தோழியாபரவிதூயவணவொநதுயிலுங்கி
வாழியங்கயிலைமேயவரதனைமழுவலானை
யூழியுமுலகுநீத்தவொருவனைககருத்திலுனனி
யாழியினமுதமனனாளருநதவமுயனறுளெனறார்- ௯௭

பிடியனநடையும்வாலப்பிறையனநுதலும்வாய்நத
கொடியனவிடையாய்மேனிகுழைநதபூங்கொம்புபோல்வாய
வடிவமுமபழகுநதேம்பவணணமுமவருநதநோறறல்
கடிஞெமிலையமமறறுக்கடுநுகர்நதாககோவெனறார்- ௯௮

வியன்மறைத்தலைவர்கூறமெல்லியன்மொழிதலாறருள்
சயிலமானருளான்மற்றோர்தலைமையாம்பாங்கிநோக்கி
யயனமுதலமரர்வீறலடற்பலிகொண்டாரண்ட
ருயிர்நிலைநிறுத்தவனறேயுண்டனர்விடததையென்றாள். ௯௯

அலைபொருதடங்கட்பேதாயருமணம்புரிநதாலம்பொன்
மலைதருநகர்நாடினறிவெறபிலோபுகுவாளென்றார்
கலைதெரிமறைநூல்வல்லீர்கல்வியின்பெருமையீதோ
மலைமகளாகததோன்றியிகழ்வதோமலையையென்றாள். ௱

இப்படியனேககாலமிமையவர்தவங்கள்செய்தார்
மைப்படிவிழியாயீசனவந்திலனவருமோவென்று
ரப்படியிரங்காரல்லரடியவர்க்கெளியார்சித்த
மொப்பிலாதொழிந்தாரேனுமொழிகலமுயிரோடென்றாள். ௬௧

மறைவலீர்போந்தவாறுவழங்கினீர்போமினென்ன
வறைதலுமமலர்நோக்கியணங்கியாம்போந்தவாறு
பிறைநுதறகருக்கட்செவ்வாய்ப்பெய்வளைத்தையலாளை
நறைமலர்மாலைசூட்டிநன்மணம்புரிதற்கென்றார். ௬௨

கறையணிகண்டத்தண்ணல்கன்னிதனைபொருட்டாற்கொண்ட
மறைவடிவுணராள்சொல்லுமறைமொழியென்பதோரா
ளிறைமகளிதையமாழ்கவிருசெவிபுதைத்ததுவெட்கி
நறைமலர்வதனங்கோட்டிநாணமுற்றகன்றுபோனாள். ௬௩

மடவரலகன்றகாலைமற்றுமோர்விளையாட்டாக
விடமணிமிடறுங்கங்கைவேணியுங்கரந்துபோந்த
கடவுள்வேதியருர்தாமுங்கரந்தனாதகைத்தாள்வல்லி
யிடம்வலந்தேடிக்காணாளிறைவனையிரங்கலுற்றாள். ௬௪

வேறு.

ஒன்றேபலவேயுலகெல்லாமோங்குருவைக்
குன்றேகடலேகொழுங்கருணைப்பேராறே
நன்றேயரிதேஞானமலர்த்தாள்சிவப்ப
வின்றேதமியேற்கெழுந்தருளவேண்டிற்றோ. ௬௫

பொன்னேமணியேபொருளேபொருண்மறையின்
முன்னேநடுவேமுடியாமுழுமுதலே
மின்னேயெனத்தோன்றிவிண்ணிலேபோய்மறைந்தா
யென்னேதமியேனியற்றும்பிழையேயோ. ௬௬

காராயழகொழுகுகந்தரத்தாயந்தரத்தா
யாராவமுதேயென்னுணர்தமாகடலே
நீராய்வெளியாயநெருங்காலாய்வெங்கனலாய்ப்
பாராயொளியாய்ப்பரந்தாய்பரமேட்டி. ௬௭

என்றாள்புகழ்ந்தாளிமையவரைப்பூம்பாவை
நின்றாளயர்ந்தாணெடுநீலமுத்துகுத்தாள்
சென்றாள்பலதிசையுந்தேடியலமருங்காண்
மன்றாடும்பாதர்மழவிடைமேற்றோன்றினார். ௬௮

பனைமணிதிருமார்பும்பவளம்போற்படர்சடையுந்
தினகரோதயவடிவுந்திருநுதலின்மேல்விழியு
மனவரதநடம்புரிவாரையவரதமுங்காட்டிக்
கனவரையின்றிருமகளார்கண்களிப்பமுனின்றார். ௬௯

பூணுர்நகிலவளைபபூமபாவைநோனபிருநது
நாணுருமேனிநலிநதாணமெலிவகலச
சேணுர்கயிலைச்செழுநதேனைமாலயனுங்
காணுததெளளமுதைககணணுணமுகநதணடாள். ௫௰

தாராறறுங்கொனறைசசடையாயெனையுடையா
யாராறறுவாரினனடியாருனைபபிரிநது
காராறறுஙகணடாகளையேறருயஙினகாதற
பேராறறிலவீழநதேனபிரிவாறறேனயானெனருள. ௫௧

வேறு.

கொாதாரிமையசெலவககோதையாளபயநதகோதாய
முநதுநீதவஙகளசெயதமுறையெலாமுவநதோஙினூனை
வநதுநாமவதுவைசெய யாமவருநதலெனறயனமாலசூழ
விநதுநாதாநதமானாவெளளியஙகிரியிறபோனா. ௫௨

க-வது உமைதிருவவதாரசசருககமுறறிறறு.
ஆகததிருவிருததம ௫௩

## உ-வது திருமணச்சருக்கம்

தனிவளைச்சாப தாசொறசாபததாரொழுவயாய
முனிவரைவரிதமனோககமுகிழமுலையிமையமாதை
நனிவளைவதுவைகூட்டாயநதனமவிரைவினவிா
பனிவளைவோனமுனபோயபபகருதிாவருதிரொனரூா. ௧

ஆஙகவரிமவானபககலணைதலுமெழுநதுபோறறித
தேஙகமழமலாகளசசிறநதவாசனததிருததிப
பாஙகெழுவளையைசசூழமபாிகிபோலவலமவநதேததி
யீஙகுஎமயததவததிரொயதவெததவமபுாிநதேனனரூன. ௨

பினனருமவரைநோககிபபிரமனேமுருககொணடனனீா
பொனனகாகழிடபயிணைபபோநதவாறெனனேயெனனக
கனனலஙகனியைநிணபாறகறபககொழுநதனனூளை
நனனாபூஙகயிலையாககுநலகுதிரயபபாலெனரூா. ௩

நநதையாமிமவானிறபததனையனமைநாகனபோநது
முநதையாருலமேதெனனமொழிதலுமுனிவாநோக்கி
யெநதையாருலகமெலலாமீனறுகாததழிபபாயாாககுங
கொநதையாகொனறைவேயநதாகொடுததகுலஙகாணென்ரூா. ௪

மேனையாாதனைககேளாவியனமகட்கொடுத்தாதமமைத
தானையாலாிததுளாாககோசமபநதமெனவுமோனா
தேனையார்மொழியாயததநதிகழமனைததீபமேனு
மோனையாயமுததமபோடறகிலையுமோமொழியாயெனரூா். ௫

தன்பெருமனைக்குஞ்சேய்க்குந்தகவுறாத்திறமுமேவுந்த
னென்பெருங்குலத்திலுதித்தெழினமலர்க்கோமளமுற்றா
நன்பெருங்கயிலையாதிராதனைவேட்பதானுன்
முன்பெருந்தவமேயென்றுன்முனிவரர்மகிழ்ந்துநோக்கி. ௬

பூளையார்கரந்தைவேணிப்புனிதர்க்கும்பொருப்பனீன்ற
வாளைநேர்விழியினுட்குமங்கலத்திருநாள்வாரம்
வேளையேயோரையாவும்விதிமுறையுரைத்துமேலோர்
நாளையேமுகூர்த்தமென்னநயந்தனர்நவின்றுபோனார். ௭

போந்தனர்முனிவர்வெண்பொற்பொருப்புறைசெம்பொற்கோயில்
சேர்ந்தனர்நந்தியுய்ப்பச்சிவபிரான்சன்னிதானஞ்
சார்ந்தனர்நிகழ்ந்தவாறுசாற்றினரிமவானசெல்வி
மாந்தளிர்ச்செங்கைபற்றிமணக்குநாளிதுவென்றார். ௮

பண்ணவருமைப்பாகர்பசுந்துழாய்முகுந்தன்வேதா
விண்ணவர்தலைவன்மேலையுருத்திரர்முனிவர்சித்த
ரெண்ணருமுலகத்தாருமேந்திழைமுழாத்தொடங்கு
நண்ணுதற்கருளநந்திநம்பிரானமனஞ்செய்தான. ௯

அங்கவரிமையமீன்றவமுதனையாளைநாளைத்
திங்களங்கண்ணிவேய்ந்ததெய்வங்கண்மன்றல்வேட்ட
மங்கலமென்றுதோன்றவகைபெறம்புவனந்தோறும்
பொங்கொலிமுரசமார்ப்பப்பொருக்கெனவெழுதார்மன்னோ. ௰

வேறு

பங்கயாசனத்திருவுறைமார்பினன்பங்கயாசனச்செல்வ
னங்கைவாரணத்திந்திரன்பாவகனந்தகனிருதீசன்
பொங்குவாரிகடற்கிறைபவனதிபன்பொருவிடையீசானன்
திங்கண்மாதங்கள்வருடங்கள்வாரங்கடிதிகளுட்கரணங்கள் ௰௧

அண்டமூலகாலாக்கினியுருத்திரர்பதின்மர்மற்றவர்போல்வார்
கொண்டபூதநாற்கணத்தரளாடகர்குறட்படைக்கூர்மாண்டர்
மண்டுநாலெழுகோடியாமிருணிலம்வளர்க்குமட்டகராவார்
கண்டபாதலம்புரக்குமாமணிமுடிக்கணபணத்துரகேசர். ௰௨

அண்டகோளகையுச்சியருத்திரரைந்துநூற்றுவராவார்
கொண்டல்வண்ணனைவிரிஞ்சனைப்பணிகொள்வார்குரகதமாசாத்தர்
சண்டமால்விடைப்பசுபதியுருத்திரர்தரிக்குமீசானூறுய
கண்டபேரனிகத்திரருருத்திரகணப்பெரும்படைவீரர். ௰௩

நூறுகோடியர்பதினொருகோடியர்நூற்றுவர்நுதற்கண்ண
ராறுகோடியினிரட்டியரெட்டுத்தோதவரவர்மேலும்
வீறுகோடியினிரட்டியாமருத்துவர்வசுக்களாம்விழுச்செல்வர்
கூறுநாலிருகோடியர்மூன்றரைக்கோடியபெருந்தீர்த்தம். ௰௪

மூலநான்முகனடங்குறவகை மூரிபுருவத்தினிடைக்கோர்கொளாறு
நீலலோகிதர்முதலினோர்பல்கோடிய பெருங்கணநாதர்
சூலபாணியர்கேத்திரபாலர்மெய்ச்சுவாமினர்திருவாணைக்
கோலமேயவர்பச்சிளங்கஞ்சுகக்கொற்றவரிருநால்வர். ௰௫

கருதுபாற்கடலுண்டுதன்னருட்கடல்கண்ணனுக்கருள்செய்தோ
னரியமாமறைவியாதமாமுனிசுகன்றதீசியத்திரியென்பான்
பிருகுரோமசனகண்ணுவனபராசரனபெருந்தவதுருவாசன
சரதநாரதன்கபிலனமாசததியனசதானந்தன்பரதவாசன். ௰௬

சித்தர்மாதவர்தங்கிராகருடர்கிம்புருடர்கின்னரர்போகர்
வித்தியாதரர்சாலகடங்கடர்நிசிசரர்வேதாளர்
சித்தர்விண்ணவர்மாகசாரியர்தயித்தியர்கடவுளர்யோகர்
சத்தநாரியரட்டமாசித்திகள்சத்தமாமுகில்வேந்தர். ௰௭

அனகநீள்சடையகத்தியனபுலத்தியனங்கிராமாககண்டன்
மனநிலைப்பெருங்காசிபனகவுதமனவசிட்டனுமெழுவோர்கள்
சனகனேசனற்குமாரனேசனாதரனைசனந்தனனெனபவர்நாலவர்
பனகநீண்முடிப்பதஞ்சலிகால்கையிறகண்பெறுபுலிப்பாதன. ௰௮

ஒருதினம்பொழுதிரண்டுமுக்காலநான்குயர்மறையைம்பூத
மிருதுவாறுடனெழுபெருந்திக்குலமெண்கிரிநவகண்ட
மருமையெண்டிசையெழுதடம்புவனமாறங்கமைம்புலநான்கு
கரணமுக்குணமிரண்டறமொருபெருங்கதிமதிவிதிமாதோ. ௰௯

சரியையாதியசதுட்டையமந்திரதத்துவம்புவனங்கள்
வருணமேபதங்களகலைகள்வனபதங்களாமத்துவாவகையாறுந்
திருமடந்தைபாரதிபுலோமிசைமுதற்றெய்வமங்கையாயாரு
மிரதமூர்த்திகளுமைகத்தனர்கயிலையிலெய்தினர்விசும்பாரு. ௨௰

புவனம்வானமுமபுதைபடமீமிசைபுடைபரந்தாகாய
கவனமேமுதல்யாவருந்தாழ்ந்தெழீஇககயிலைமாலவரைசூழ்ந்தார்
குவலையந்தொடுத்தணடகோளகையெலாங்கோத்தெழுமுகவாரி
சிவபிரான்பெருந்திருமலைபணிந்துபோயவலஞ்செயுஞ்செயனமான. ௨௧

ஒத்தெழும்பதினான்குபேருலகமுமொருமுகங்கொடுபோந்து
மத்தனைக்கெலாமவரவர்க்கிடங்கொடுததண்ணலார்கயிலாயம்
பத்துமுததமிழப்புலவருக்கருளசங்கபபலகையொத்ததுமேலுந்
தததயண்டமும்பூண்டதோர்பாரிடத்தலைவனொத்ததுமாதோ. ௨௨

எயில்சிதைத்தவில்லாதலாலெம்பிரான்றிருக்கைடயினின்மேருச்
சயிலநிற்றல்போனினறபொற்கோபுரந்தனைத்தொழுதெழுந்தேகிப்
பயினமணப்பெருங்குழுவெலாநிறைதலாற்பரம்பரனுடன்மேவக்
கயிலைநற்கிரிபுலகெலாமீனறருள்கவுரியுநிகராமால். ௨௩

உவரிமாலைபஞ்சருத்திரகணமுதலுயர்ந்தவர்சூழ்வல்லாளு
சிவபிரான்றிருவாய்தலின்மொய்த்தனர்தேன்குடத்திரளீபபோ
லவர்கள்பூசிர்பாலவர்கணாதர்பாலறிவிப்பவவரோசி
மவுனநந்திபாலுணர்த்தலுமாங்கவன்வள்ளலார்க்கறிவித்தான். ௨௪

தருகவீண்டெனவருளலும்வேத்திரத்தனிப்பெரும்படையோச்சி
வருகவென்றவன்மரபினுலுய்த்திடவந்திறைஞ்சலும்வாக்கா
லருமைநோக்கிநலருட்குறுமுறுவலாலவரவர்க்கருளசெய்தா,
னொருவனுகிமறநூலெலாமாகிநினறுயிரகளெலாமுயிராவான். ௨௫

எம்பிரானிடத்திவ்வணநிகழ்தலுமிமையமாலவரைவேந்தன
கொம்பனுண்மணவோலையுய்த்தலுங்குலவரைக்கிறையவர்யாரு
மம்புராசிகட்கதிபர்தங்கணங்களுமருண்முனிக்கணம்யாவும்
பம்புமால்வரைதெய்வதக்குழாங்களும்பரவைபோற்பரந்தனரே. ௨௬

கமலைபூமகள்பாரதிவயிணவிகாடுகொளபிரமாணி
குமரிவீரிமநதாகினியோகினிகொறறவையயிராணி
யமலமேனகையுருப்பசிதிலோத்தமையரமையயர்தழுவெல்லா
முமையைவந்தடிதொழுதெழீஇத்திங்களைசூழ்சகுலமெனச்சூழ்ந்தார. ௨௭

நகரமாடங்கள்கூடங்கள்கோயிலகணஞாயில்கள்செயகுனறரு
சிகரகோபுரமாளிகைசூளிகைதெற்றிசித்திரகூட
மகரதோரணங்காவணம்பூவணமணறநாடகசாலை
யகரமாயிரகோடிகளவகுததனனமபாகம்பியனமேலும் ௨௮

மேடைமேனிலைபரிகைவேதிகைவிரவுசாளரங்கோடி
மாடைமாமதிமணியினுலரியமலரினுனமணபபநத
ராடைநீள்கொடிபடங்குசாமரைகுடையணிகொள்பூரணகும்ப
மோடைமாகரியாளிகணமீளிகளுருக்களபறபலகோடி. ௨௯

இரசதத்தபூகதம்வயிரேரியதசெழிலரம்பைகளுட்டி
மரகதத்தினற்பாசடைகாய்கதுலைவகுததூநறபசும்பொன்னுல
விரவுமெனபழுககாய்பழுத்தாறுசெணணிசநிலவிரிபாளை
புருடராகத்தாற்பவளமாமணியினு பூங்கொத்துமமைவித்தான. ௩௰

மண்டபங்களுமாளிகைபபுறங்களுமாடகூடமும்வான்மேற
கொணடகோபுரங்களும்வளைகளபோறகுழுமலாற்பணிகுன்றம்
பண்டையாதியம்பரனைவேட்டவனுறைபனைதிருவிளையாட்டா
லண்டம்யாவையுமெடுத்தெடுத்தடுக்கியசிற்றில்போன்றதுமாதோ- ௩௧

தெருக்கள்பற்பலவமைத்தனபுவனயாத்திரள்வகுததனபோது
முருககள்பறபலவகுத்தனவுயிரெலாமொருஙகுதித்தனமாலும்
பொருப்பிலிங்கிவைவகுததவான்கம்பியனபூவின்மேலயன்போன்று
ளருத்தவீதியிலணியினுக்கணிசெய்வாரடனைமகாடித்திரள்போன்றார்- ௩௨

வல்லிதோரணந்தழைதொடுத்தியற்றுவார்மாத்தளழவனமாக
முல்லைமல்லிகைசண்பகநாற்றுவார்மொய்ம்மலர்ப்பொழிலெய்ப்ப
வெல்லைமொய்த்தெழுகொடிபலநிரப்புவாரொங்கும்வானவிமானத்
தொல்லைமீதொளிர்தூயவானகமெனச்சுடர்விளக்கணிசெய்வார். கங

அரியநாண்மலர்த்தேன்களாறகுறிஞ்சிமேற்குறிஞ்சியானதுசார்தாள்
மருதமானது முல்லையேநிகர்த்ததுமாதர்மெய்விளையாட்டாற்
பரவுமாமணித்திரள்களாற்பரல்படுபாலையொத்ததுபன்னீர்
நிரவிவீசலானீர்வளர்நெய்தலேநிகர்த்ததுபனிகுன்றம். கச

மலரிறைகரும்பாற்சுரும்பாண்மடமாதரானடைக்காவாற
குலவுதென்றலாற்கொடிநிரைத்திருண்டதாற்காமதனுயிர்மீட்பான்
சிலையுநாணும்வெங்கணைகளும்வேழமுஞ்சேனைதேர்படைவீடு
முலகநாயகிதிருமணச்செவ்வியார்தொருங்குநிற்பனமானும். கரு

இறைத்தசுண்ணமுஞ்சிதறும்வெம்பொறிகளுமெடுத்தெறிவிடுபூவு
நிறைத்தமாலையினுகுத்ததண்மலர்களுநிலாததுவீழ்பூந்தாது
நறுக்கியொப்பிடுசரங்களிற்சிதறியநவமணிகளும்பொன்னுங்
குறித்தகுப்பையாறபனிவரையனந்தமாங்கொடுமுடியுடைத்தம்மா. கசு

இமநெடுங்கிரிகாவலனின்னணமெழிலவரையணிசெய்யக்
கமழ்பசுந்துணர்க்கொன்றைநதொடைபுனைகயிலையம்பெருமானைத்
தமனியப்பணிகொடுமணவணிசெயச்சதுமுகனெதிர்வேண்ட
வமரர்தம்பிரானணிநதமைகாண்கெனமுறுவல்பூத்தருள்செய்தார். கஎ

புலவுநாறுகோட்டாம்பல்வெம்புலிதருபோர்வையுமுட்சாத்துங்
கலிகொள்பாரொலாமொருபணதேநதியகணபணுடைவிக்கச்சு
மொலியலாகிமேலொளிறுபீதாம்பரவுத்தரிகமுமாகி
வலியகாஞ்சனபபட்டிகையாகவுமலிநதுதோனறியவன்றே. கஅ

காதிறகுண்டலமார்பணிசரப்பணிகண்டிகைதிருத்தோளின்
மோதுபொனவளைகங்கணம்பவிததிரமோதிரஙகளையாழி
போதிறபொஙகியவாசிகைகரோடிகைபுனைதிருவரைநாண்கள்
பாதநூபுரபபொறபணியாயினபணுமுடிபபணியெல்லாம். ககூ

அமருப்பொடுமீனலோசனம்புடைதொடுத்தவெண்டலைமாலை
காமர்பொனனணிசனனவீரம்பலகாசணிப்பணியாக
மீமயானத்துவெண்டிருநீறுவெண்கருபபுரநறுஞ்சாநதா
யாமைமேயாடுபொற்பதக்கமாயென்பெலாமாரமாயினமாதோ. உ௦

கண்ணின்மேற்றிகழ்கண்ணொளிர்தருங்குறிகவினுதற்குறியாக
வண்ணனமேறகுழைமகரகுண்டலதொடுமணிவளைத்திருத்தோடும்

விண்ணின்மேற்பொலிகதிரொளிநிலவெனவிளங்குபேரொளிவீச
வண்ணமின்மணித்திருமுடியானதுவளர்சடைமுடியம்மா. ௬௧

வேறு.

மணிப்பணியங்கதப்புயமும்வாய்ந்தபொன்
னணிப்பணியகலமுமகலங்காண்குறத்
தணிப்பணிதகைகலையாற்சலித்திட்டான்சகம்
பணிப்பணியகிலமும்பார்த்தபார்வையான். ௬௨

பூதநாயகன்முடிதொடுத்துப்பூணெலாம்
வேதநான்முகன்விழிகுளிர்ப்பக்கண்ணுறீஇப்
பாதமேற்பணிந்தெழீஇப்பண்டுநானுந்தன்
றாதையும்பெறவொணாத்தவம்பெற்றேனென்றான். ௬௩

வேறு.

கொம்பனாள்பெருமணநிறைவேறவானிமையவர்குறைதீர
வெம்பிரானெழுந்தருளுகதருணமென்றிமையவெர்பிறையேகித்
தம்பிரான்றனக்குணர்த்தலுங்கயிலையஞ்சயிலநின்றட்டேற்று
நம்பிரான்புறத்தவர்ந்தனருயர்கணநாதர்போற்றியநாதர். ௬௪

நீலலோகிதராடகரட்டகர்நிமலர்நூற்றுவரண்ட
மேலையுச்சியரண்டமூலத்துறைவிமலருத்திராயாரு
மாலும்வேதனுஞ்சயசயசயவெனவரதனைப்புடைசூழ்ந்தார்
கோலமேருமால்வரையினைச்சூழ்தருகுலவரைதிரண்மான. ௬௫

பிந்துபல்கணநாதரும்பூதரும்பெருந்திரைக்கடலேய்ப்ப
வைந்துபல்வகைவாத்தியமுழக்கொலியந்தரவெளிபோர்ப்ப
விந்துவைத்தவர்திருமணத்பெருங்குழாமெண்டிசைக்கடங்காதே
தந்தமைத்தெளிந்தவர்பிரானருளெனச்சகமெலாங்கடந்தேக. ௬௬

மோதகம்பணிக்கோடுபாசாங்குசந்தரித்துமுடிகமேறித்
தாதைதன்மணத்தங்குரமெனமுனர்த்தந்திமாமுகனேக
வேதபாரகர்வாழ்த்தொலிமுழங்கிடவிஞ்சையர்புகழ்பாடக்
கீதகின்னரர்தும்புருநாரதர்களரிலசையமுதூறற ௬௭

இந்திரன்குடைநிழற்றிடப்பாவகனெடுத்திடநறுந்தூப
மந்தகன்படைதாங்கவீசானன்வந்தடைப்பைகைக்கொளலுதை
முந்துமாலவட்டங்கொடுசுழற்றமுந்நீர்க்கிறைதளிதூவச்
சிந்துபல்கொடைத்திரவியமெடுத்தெடுத்தேந்திடவளகேசன். ௬௮

கிருதிபாதுகைசுமப்புமாநாகங்கணிகாமணிவிளக்கேந்தப்
பரிதிசோமர்தீவாத்திகைபிடித்திடப்படிவர்பல்லாண்டோதச்
சுருதியாயிரநாமமேத்தெடுப்பவான்சுரர்கள்பூமழைதூவ
விருதாள்களுங்கோள்களுநிமித்தமூமேவியபணிகேட்ப. ௬௯

பனிவரைக்கிரிபொழிதல்போலிமசலம்பண்ணவர்புடைதூற்றக்
கனிமொழித்திரளரம்பையர்தமனியக்கவரிகாலசைத்தேக
வினியமாலயனிருபுடைகாப்பமற்றிமையவர்புறங்காப்பப்
புனிதநந்திதன்கணத்தொடும்வேத்திரப்படையொடுமுன்போத. ௫௰

அருமைநாயகன்வருகின்றானடிமுடியரியயனறியாத
பெருமைநாயகன்வருகின்றானுலகெலாம்பெற்றருள்பெருமாட்டி
திருமணஞ்செயவருகின்றானுதல்விழித்தெய்வக்கண்மணவாளன்
வருகின்றானவளநிறைவொடுகுறைவிலாவாழ்வினான்வருகின்றான். ௫௧

அமரர்நாயகன் வருகின்றானாலமுண்டமரர்தேவியர்க்கெல்லாந்
தமதுமங்கலந்தத்தமக்கருளியதனிமுதல்வருகின்றா
னிமலனிட்களநிராமயன்வருகின்றானினைப்பவர்மலமாயைத்
திமிரபாற்கரன்வருகின்றானெனப்பலசினனங்கள்பணிமாற. ௫௨

புடவிசூழ்தருபெருந்திரைக்கடலெலாம்புறக்கடலொடுந்தாவிப்
படருகாநதநாள்வெள்ளியங்கிரியின்மேற்பானுவாயிரகோடி
சுடர்தழைந்திடத்தோன்றியதெனமணத்தொகுதியாம்பெருவெள்ளத்
திடைதிளைத்துமால்விடையின்மேலெம்பிரானெழுந்தருளியவேலை. ௫௩

வடபெருங்கிரிக்காவலன்மந்தரமன்னவன்வடவிந்தத்
தடவரைக்கிறைகந்தமாதனத்திறைசக்கரக்கிரிவேந்த
னிடதவெற்பினனேமகூடத்திறைநீலவெற்பினனாதி
யடல்வரைக்குலவேந்தருமெழுகடற்கரசரும்புடைசூழ. ௫௪

அம்மலைச்சிலைவளைத்தவர்புயமலையதிசயந்தனைக்காண்பா
னெம்மலைக்குலங்களுமெதிர்போந்தெனவிமையமாமலைவேந்தன்
மைம்மலைப் புரவலரொடுமருகனுக்கெதிர்கொடுமலர்தூவிச்
செம்மலைப்பணிந்தினியனமொழிந்துதன்செழுமலைப்பதிசேர்ந்தான். ௫௫

ஈசனைத்திருமருமகவாகவந்தெய்துறத்தவஞ்செய்தான்
பாசனத்தொடுமெதிர்பணிந்தேகலும்படர்விடைக்கொடியாட
நாசமில்லவரிமவரைவீதிவாய்நகர்வலஞ்செயப்போந்தால்
வாசநற்பதிநால்வகைப்புவனமுந்தமைவலஞ்செயமாதோ, ௫௬

வேறு.

பண்களித்தபனிமொழிச்செய்யவாய்
வண்கிளிக்குலம்போல்பவர்வள்ளலார்
விண்கலக்குமிடற்றெதிர்நோக்கினார்
கண்களித்தனர்கார்கண்டதோகைபோல். ௫௭

கார்த்தபூங்குழல்கட்டழகுக்கலா
மேர்த்தபேரெழிலாளரிவரென்பார்
தீர்த்தன்மேனியுஞ்சேயிழைமேனியும்
பார்த்தகண்கள்பறிப்பரிதாமென்பார். ௫௮

அண்டர்நாதராமிவனுக்கோர்குறை
கண்டமீதுகறுப்புளதாலென்பார்
வண்டுவார்குழன்மாதெழில்பார்க்கினு
முண்டுசிற்றிடையாற்குறையொன்றென்பார். ௫௯

மண்ணின்மேற்புனன்மேல்வன்னிமாருதம்
விண்ணின்மேலடங்காவுருமேவினார்
பெண்ணிமேலவள்பேரெழில்காணவோ
கண்ணின்மேலொருகண்படைத்தாரென்பார். ௬௰

சங்குசோர்வதுந்தாழ்குழல்சோர்வதுந்
தொங்கன்மேகலைசோர்வதுநோக்கலா
ரங்கணெழிலாராவமுதினை
நுங்குவாரெனநோக்குவர்நோக்கினால். ௬௧

காய்தரும்பிறைமாமுடிகாட்டியே
மோய்தரும்பெருமோகத்தைநல்கினார்
சாய்தருந்தொடிகொண்டனர்தக்கவோ
வாய்திறந்தொருவார்த்தைசொல்லாரென்பார். ௬௨

சுழிகுளாமுகத்தோகையன்னீர்நமைக்
கழிவிலாதுயிர்காத்தலுமோனமோ
விழியினானமதவேளையும்வென்றுளார்
மொழியினாற்சகமூன்றும்வெல்வாரென்பார். ௬௩

தூயசோதியருள்சுரங்கின்றகண்
காயுமோவிவர்கட்டெழில்காணவே
போயமாரன்பொறாமையினமாய்ந்தனன்
வேயுங்கண்ணழல்வெந்தழலபோலென்பார். ௬௪

ஆரமாதவஞ்செய்யவயர்கின்றோம்
வீரமாதவர்வெம்புயத்தண்ணலைச்
சாரமாதவன்றங்கைநற்கங்கைபோற்
சேரமாதவஞ்செய்திலம்யாமென்பார். ௬௫

நுதலைக்கண்டுநுடங்கியகூன்மதி
மகலைத்தார்முடிவந்தமைக்காயுமான்
முதலைச்சேர்ந்துகளுழனைமோடணம்.
விதலைப்பார்ந்தள்விளைத்தமைபோலென்பார். ௬௬

வஞ்சிகைவளைபோழ்வழிமற்றுமோ
ரஞ்சொலாளைவிருவவளூந்தன்
னெஞ்சுபோம்வழிதேடவுநேடிப்போய்த்
தஞ்சல்போக்கினின்றுனொடுசொல்லுவார். ௬௭

போதுசார்தரும்பூரணகும்பமு
மாதர்தாங்குபொனமாடம்புகாமலே
மீதுராதனையுங்கொடிவீதிபோ
மீதுமால்விடையென்பதுமெய்யென்பார். ௬௮

அஞ்சலென்றகமலமெய்யாரருட்
கஞ்சமாம்பொதுக்காட்சியைத்தம்மன
முஞ்சலாடவுமக்கெமக்கெனவே
விஞ்சுபூசல்விளைத்துநிற்பார்சிலர். ௬௯

அகிலுண்கோதையராயிரகோடியர்
புகிலுமாரமுஞ்சோர்வதுகண்டுநீர்
முகிலுங்கூந்தலொநத்திமுன்னேகுவார்
நிகிலநாதர்க்குநீதியிதோவெனபார். ௭௰

பரதமால்வரைவீதியிற்பாவைமார்
சுரதவாள்விழிவண்டினஞ்சூழ்வர
விரதயோகர்விழித்தும்பியார்தலால்
வரதர்மேனிமதுத்திரண்மானுமே. ௭௧

வேறு.

உரகர்தானமுங்கீழ்ப்படவெண்மர்வாழுலகமுந்திகைத்தேங்க
விரவிமாமதிபுகர்குருவாதியரிடங்கள்கோவிடமாக
விரவுகின்னரர் அரர்வாழிடம்வீணையெய்திடவோங்கிப்
பரமர்மாமணப்பெருக்கொடும்பொலிந்ததாற்பணிவரைவளமூதூர். ௭௨

விநதைவானவர்வருதலாற்பவனமும்வெறுக்கையெய்திடவாணி
யநதனுளனுங்கணத்தொடுவருதலாலவனுலகலொய்தப்
பைநதுழாயனுங்கமலையுமேவலாற்பாற்கடல்சலமேவ
நநதிநாயகனவருதலாற்கயிலையுநணிவிளர்த்ததுமாதோ. ௭௩

மேவுவிஞ்சையருலகமென்பர்சிலர்விரிஞ்சன்வாழுலகென்பார்
தேவலோகமாலுலகமென்பார்சிலர்சிவபுரமிதுவென்பார்
தாவிலேழுடனேழுபேருலகமுந்தந்ததிரகமொன்பார்
யாவுமீனறவடன்னையீன்றருள்பதிக்கிதுகொலோவரிதென்பார். ௭௪

வேறு.

பூதர்சங்கமும்வானவர்சங்கமும்புவன
நாதர்சங்கமுமுருத்திரர்சங்கமுநானகாம்
வேதர்சங்கமுமாமுகிற்குலத்தொடுமிடைநத
மாதர்சஙக மாமினமெனும்பொலிவனமறுகு. ௭௫

கொடிகளும்பெருங்குடைகளுநிலாத்தகோவேந்தர்
தொடிகளுநதிரண்முடிகளுமுகுத்தபொற்சுண்ணப்

பொடிகள்சிந்திடமிமசலச்சேறுகால்புதைந்து
பிடிநூற்றுடியடிகளுங்களிமெருடும்பிளிறும். ௭௬

தெருவடங்கலாப்பெருந்திரளாகினுஞ்செகத்தோர்
பொருவினைபயன்பொருத்திடுநியதியேபோல
மருவுஞாயிலின்றிருக்கடைநெருக்குறவருவோர்
பெருமைகீழ்மையினமைத்திடுநேர்திகைப்பிரம்பு. ௭௭

குன்றுளார்திசைவேந்தருநாரியர்குழாமும்
வென்றிமாலயனுருத்திரகணத்துமேலவரு
மன்றுளார்மழவிடையுமாமுனிவருமல்லா
னின்றுளார்பதம்பெயர்த்திலர்மறுகெலாநிரம்பி. ௭௮

தவமுனிக்கணமரசிலைதருப்பைநீர்தெளிப்ப
வவர்திருக்குலமாதர்நீராஞ்சனமமைப்பத்
துவசநற்குடமணிகொடிமுரசுபூநதோட்டி
கவரிதீபமாமெண்வகைமங்கலக்கலங்கள். ௭௯

எண்குலக்கிரிமடந்தையரிவைமுறையெடுப்ப
வண்கருப்புரதீபமோர்மேருமால்வரையிற்
பெண்கையிற்கொடுவலஞ்செயத்தெய்வதப்பிறைக்கள்
கண்களிப்புறவேந்துமாலத்திகள்கருல. ௮௰

வேறு.

முருகையார்தழையானீரான்முதுவரைத்திரிகூடத்தி
லொருகையாற்பதம்பூசித்தவுயர்கயகருணனென்பா
னிருகையாங்கமலம்பற்றிவிடையினின்றிழிநதுாநதி
தருகையாலமரர்மோலிசாத்துபாதுகைதாள்சாத்த. ௮௧

இடம்வலமயன்மால்செங்கைபற்றிமுத்தொழிலுக்கென்று
முடைமைதோன்றிடவசுக்கள்சுவத்திகமுரைப்பமாதர்
நடைபடம்விரிப்பவானோர்நாண்மலரிறைப்பச்சென்றார்
வடவரைவளைத்தவள்ளல்பணிவரைக்கோயில்வாயில். ௮௨

ஈசனேமருகாவெய்தவேமுலகின்றுடன்னை
வாசமாமகவாப்பெற்றுமரபெலாம்புனிதம்பெற்று
ளாசறுபுனலாலண்ணலடியிணைவிளக்கிச்செய்யும்
பூசனைநீராலுள்ளும்புறத்தினும்புனிதஞ்செய்தாள். ௮௩

அங்கிலைகடந்துபோகியாயிரம்பவளச்செங்காற்
பொன்னின்மண்டபத்துள்ளப்பட்புருடராகத்தின்வேதி
மன்னுபொற்பதுமராகமடங்கலாசனத்தின்மேவிப்
பன்னெறியமரர்போற்றப்பரஞ்சுடரிருந்தார்மன்றோ. ௮௪

இருந்தபின்பிரமன்மாமாலிந்திரனெழிற்கூர்மாண்ட
டொருங்கமராடகேசனுருத்திரர்முதலோர்யார்க்கு
நெருங்குபொற்றவிசுந்தூசுநிரைத்தகம்பல்முநாதர்
தரந்தரமிருக்கைகாட்டித்தடங்கண்ணலருளிச்செய்தார். ௮௫

பாருளார்விசும்பினுள்ளார்பாதலத்துள்ளார்பார
மேருவாரிமையமாதிவெற்புளார்புவனவேந்த
ராருளாரவர்கட்கெல்லாமண்டபமமைந்ததம்மா
சேருவார்க்கெல்லாநாதர்திருவடிக்கமலம்போல. ௮௬

மன்றலின்குழூநிறைதலாற்றாழ்ந்ததுவடபெருந்திசையாவு
நின்றதெக்கணம்வானுறவுயர்ந்ததுநெளித்தனனுரகேசன்
றென்றிசைக்கடல்வடதிசைக்கெழுந்ததுதிகைத்ததுவடமேரு
மென்றளிர்க்கரம்விதிர்த்தனள்பார்மகள்வெருவினவுலகெல்லாம். ௮௭

மனிதர்மாதவமுனிவர்பானுவைத்திடமாமுனிவராகிப்
புனிதவானவர்க்கியம்பவானவர்வெரீஇப்போந்துபொன்னுலகாளு
நனிகொள்வாசவற்குணர்த்திடவாசவனான்முகற்குரைசெய்ய
வினியநான்முகன்மாதவற்குணர்த்தினனெழுந்தனரிருவோரும். ௮௮

உவணவூர்தியுந்திசைமுகக்கடவுளுமும்பருந்திரண்டேகிப்
புவனமூன்றுமோர்பொருப்பினமேற்படர்தலாற்புவிபொறையாற்றமற்
கவனமேகொடுவடதிசைதாழ்ந்துதெக்கணதிசைமேலாகிப்
பவனநோக்கியதெனவுயர்கயிலையம்பரமர்பாலறிவித்தார். ௮௯

உம்பர்யாவருமுறையிடுதலுந்திருவுளத்திலடையருள்கூர்ந்து
கும்பசம்பவமுனிவனைத்திருமணக்குழாத்திடைக்குறிப்பாக
வெம்பிரான்றிருக்கடைக்கணோக்கலுமிறைஞ்சினனெழுந்தேகிச்
சம்புநாயகசரணெனநின்றுவாய்புதைத்தனன்செவிதாழ்த்து. ௯௰

தாழநின்றெதுபணியெனப்பரவுவான்றனிமனங்களிதூங்க
வாழ்பெருங்கடல்முழுதுகுத்தெனத்திருவாய்மலர்ந்தருள்செய்வார்
சூழ்பெரும்பதினல்வகைப்புவனமுந்தொக்கபேரவைகாட்டி
யேழ்பெருங்கடலெழுபெருந்தீபமுமெடுத்துமேலிசைக்கின்றார். ௯௧

மகரவாரிதிநடுவுறைமரக்கலம்வளைந்தநாவலந்தீபம்
பகருமாடகக்கிரியொருபாயமரந்துருவசக்கரம்பாயல்
சிகரவெண்குலக்கிரிகளுநங்கூரத்தீவிசைகல்லாகு
நிகரில்பல்லுயிர்த்தொகைகளேவகைபெறநிறைத்திடும்பலபண்டம். ௯௨

மன்றல்சேர்பெருமங்கலக்குழுவினுன்மகிதலமெனுநாவாய்
தென்றிசைப்புறமுயர்ந்திடவடதுறைசென்றுதாழ்ந்ததுபாராய்
நின்றுநீள்கடலமிழ்ந்திடாதினிநிலைநிறுத்துதற்கியாம்வேண்டு
மின்றியெம்மையேயிடைவிடாதுளத்தினிலிருத்தியநீவேண்டும். ௯௩

சந்திராதித்தர்வலம்வருமுலகெலாந்தழைத்திடமனைவாழ்வு
மிந்திராதியர்சுவர்க்கமுநிலைபெறவிமையமீன்றதண்மாலை
மந்திராகமப்படிமணஞ்செயமணம்வைத்தநம்பொருட்டாக
சந்திராவடமுனிவநீதென்றிசையப்பொடுஞ்செலவேண்டும். ௧௪

வேறு.

சென்றுநீதெக்கணபான்மெலிவகற்றித்தென்மலைக்கேசெறிந்துவாழ்தி
துன்றுகதிர்முதல்வானோர்நெறிசெலுத்திமேருவில்வாழ்துருவன்போல
வென்றபாம்பரனருளவேறுவிண்ணப்பமெனவிறைஞ்சியேத்தி
யொன்றுதமிழ்க்குறுமுனிவனிரண்டுவரம்வேட்டருளாலுணர்த்துகின்றான். ௧௫

முன்னாதுநீயிமையவரைச்செல்விதனைமணம்புரியுமுறைமைகாணப்
பின்னாதுநின்றிருநடனங்காணவெனுமாசையினுற்பெரிதுகாலம்
பொன்னசலத்திருந்துதவமியற்றியொருகாட்சிபெறப்போந்தேனிப்பா
லின்னமுமொன்றுளதாகவிரண்டுமெனக்கெய்திடுநாளெந்நாளென்றான். ௧௬

பனகவணைநாணுடையார்குறுமுனிபாலருள்கூர்ந்துபரிவானோக்கிக்
கனகவரையாயிரயாண்டுதவுபலனுறுண்டிற்கரமகோட்டி
சனகவரைகொடுக்குமநதத்தவபயனையோராண்டுதன்னிலேநல்கு
மனகவலாத்தெக்கணபாற்கேதாரமுதலுளவென்றருளிப்பின்னும். ௧௭

தென்பாலிலொருதலத்துக்கோடிநாளுதவுபலன்சிறிதுநாளின
முன்பாகக்கொடுப்பதொருதலமுளதங்கதுபிறர்க்குமொழியோநம்பா
லன்பாகவினவுமவர்க்கருள்செய்வோமெனவுரைப்பவருளாயென்று
பின்பாவுஞ்சடைமுனிவன்பாதமலர்சூடுதலும்விளம்பாநின்றார். ௧௮

பொன்மலைக்குங்கயிலையெனும்வடமலைக்குந்தென்மலைநின்பொதிகைவாசத்
தென்மலைக்குவடமலைநந்திரிகூடத்திருமலைமேற்செம்பொன்னாட்டு
மின்மலைக்குமணிகொழிக்கும்வடவருவிக்குற்றாலம்விபுலமீனற
நின்மலைக்குமெமக்குமொருபொதுத்தானமூவருக்குநியமத்தானம். ௧௯

புண்டரிகத்தயனுரைப்பவத்தலத்துப்புரந்தராதியர்கள்போந்து
மண்டுபெருந்தவம்புரிந்துமாறுதபாதகங்கண்மாற்றுந்தானம்
விண்டலத்தோர்மகிதலத்தோர்வினைதீர்க்குங்கங்கைவினைதீர்க்குந்தானந்
தண்டமிழ்சொன்மாமுனியேதருமமொன்றுகோடியெனத்தழைக்குந்தானம். ௨௰

செல்வம்வேண்டினர்க்கருளத்திருமைக்காத்திருப்பதனாற்செங்கண்மாலுங்
கல்விவேண்டினர்க்கருளக்கலைவாணியுறைதலினாற்கமலத்தோனும்
வெல்விசையங்கொடுப்பதற்குக்கொற்றவையுமகப்பொலிவால்வேள்விவேந்து
நல்வடுகச்செம்மலுங்காத்துறைதானந்தமிழ்ச்சுருதிநடிக்குந்தானம். ௨௧

முத்தநகையரமகளிர்முலைத்தடத்துவானவர்கண்முயங்குந்தோறு
முத்தரிகந்துயல்வருவானவர்புயத்திலவர்முலைக்கோடுழக்குந்தோறு
மித்தலத்தினமகிமையெணக்களிகூர்ந்துதிசைநோக்கியிறைஞ்சுந்தானஞ்
சித்தர்சாரதரியக்கர்கின்னரர்கிம்புருடர்தவஞ்செய்யுந்தானம். ௨௨

பந்தாடல்கழங்காடல்கற்பகப்பூம்பந்தரிடைப்பசும்பொன்னூசல்
வந்தாடல்கங்கைநதிவிளையாடல்பூங்காவின்மலர்கொய்தாட
லிந்தாடன்முகமலரவிந்திரனோடாடுதோதீமிந்திராணி
சந்தாடன்முலைதடிபபவிதழ்துடிப்பப்பாடியசீர்தழைக்குந்தானம். ௩௩

வேறு,

கலைப்பெருங்கடல்களெல்லாங்கருத்தினிலடக்கிக்கையி
லலைக்கடலடக்கிநம்பாலருட்பெருங்கடலினாடு
நிலைக்கடமுனிவகேணமோநின்மலப்பரையும்யாமுங்
கொலைக்கடகரிசெய்பூசைகொண்டினிதிருக்குந்தானம். ௩௪

அநகர்க்கணியாயூழியாழிதாங்கெயிலாயோங்கு
முன்னதத்திரிகூடத்திலுத்தரபாகமாக
என்னர்சித்திரபூங்கங்கைநதருளாகத்தோன்றி
முன்னினரெவர்க்கும்பாவமோசனஞ்செய்யாநிற்கும். ௩௫

தேனமர்திரிகூடத்திற்சித்திரநதிதோய்வார்க்குத்
தானமுந்தவமும்வேறுதருமமுஞ்செய்யவேண்டா
ஞானமும்புகழுங்கலவிநலங்களும்பொருளுமெய்தும்
வானவர்பதமும்வேண்டும்வரங்களுங்கொடுக்குமாதோ. ௩௬

உத்தரமுகமதாகவுயர்திரிகூடந்தோன்றுஞ்
சித்திரகங்கைநம்பாற்றிருமணங்காணவேண்டி
யித்தலைபோந்ததங்கணெய்துதற்கருளுகின்றே
மத்தலையகத்ராடியருந்தவம்புரிதியென்று. ௩௭

வேறு.

வேடனொருபன்றிதுடர்ந்தொருதுறையில்வீழ்ந்துபெற்றவீடுபேறுந்
தேடருமெய்த்தலமூர்த்திதிரிகூடவடவருவித்தீர்த்தஞ்சத்தி
பீடமகிமையும்வேதக்குறும்பலாமான்மியமும்பிலையகாணு
மாடல்பெறுஞ்சிறபொதுவினதிசயமுநதிருவாக்காலருளிச்செய்து. ௩௮

ஓதியபேருலகனைத்துமொடுக்குமுறையொடுக்கியநாளொடுங்காதாகி
நீதிபெறநமதருளானின்றபுடார்ச்சுனபுரத்துநின்றியாமே
சோதிபெறுதிருமுகமாயிரம்படைத்துத்தரும்புவனத்தொகைகளெல்லாம்
போதிலுறையயனுகிவகுத்தருளித்திருமாலாய்ப்புரக்கின்றேமால். ௩௯

மாலாகியிருக்குநமைப்பணிந்துசிவவடிவாக்கிமகுடமென்னு
நூலாதியாகமத்தாறபூசைசெய்துறுவலுமணக்கோலங்காண்டி
மேலானதிரிகூடச்சாரலிடையைஞ்ஞூறுவேள்விசெய்து
காலானமறைபரவுநம்பெருஞ்சித்திரசபைக்கேநடனங்காண்டி. ௩௰

மூர்த்தமலையொடுமொழுமினிதுறையுங்குற்றாலமுறையிற்போற்றிச்
சந்தமலர்த்தடங்கோட்டிலுறைதியெனவருளுதலுந்தம்பிரானை
வாதமலைக்கடலடக்குமலர்க்கையார்பரவிநின்றுவரம்வேறொன்று
விந்தமலைவாதாவிக்கிடர்தடிப்பவலம்புரிந்துவேண்டிப்பின்னும். ௱௧௧

தொழுதுபுனல்வேண்டுதலும்பொன்னிநதிசென்னிமதித்தொடையார்நல்க
வொழுகுநிறைப்பெண்டகைமாராண்டகைபின்றனித்தேகலுரித்தோவென்றுள்
செழுதகைநம்மன்பனிவனிருயிலையென்றவனெனவேகிளப்பமீளும்
பொழுதுகுறித்தருளுமெனப்புவியிலவன்கைகாட்டும்பொழுதேயென்றார். ௱௧௨

நம்பரருள்கொண்டுவிடைகொண்டேகித்தென்புவியினவைகண்மாற்றிக்
கும்பமுனிதண்பொதியத்தென்பொதியமாமலைமேற்குறுகுங்காலை
யும்பர்வடதிசைபோலத்தென்றிசையுமொத்ததுகோவணத்தாலோர்நா
ளெம்பெருமானமர்ந்தேயுவாதேழுமொருதலையினிருந்தட்டேபோல். ௱௧௩

வேறு.

ஒருதிண்புவிகோணறநிற்றலினும்பரெல்லாம்
வருநம்பனைமாலிமையதுவணங்கியார்ந்தா
ரிருமங்குலிற்றெறிவையயோதியரீன்றபொன்னைத்
திருமங்கையர்பொற்பினையொப்பனைசெய்வதானார். ௱௧௪

அகிலாண்டமுமீன்றழகுக்கழகாகிலாளைத்
திகழ்பேரெழிலுக்கெழில்செய்வனசெய்யநேர்ந்தா
ளிகமேலுறுபேதைமைமாதரியற்கையாலோ
சகமேலளவுக்களவாமவடன்மைதேர்ந்தோ. ௱௧௫

ஆலத்தையவர்க்கமுதாக்கியவண்டமெல்லாஞ்
சாலப்பெருமங்கலமாக்கியதையலாட்குக்
கோலத்திருமேனியைமங்கலக்கோலஞ்செய்யக்
காலத்தினமுன்னெண்ணியபூசைக்கடன்சமைந்தாள். ௱௧௬

கங்கைப்புனலாட்டிமணிக்கலைநீறுசாத்தி
யங்கைத்திருமாமலர்செய்தவருந்தவத்தான்
மங்கைக்கணிசெய்வதுபோனமலர்மாமடந்தை
செங்கைப்பலசெம்பொனணிக்கணிசெய்வதானாள். ௱௧௭

காராடுகருங்குழலாகியகங்குன்மீதே
தாராகணமொய்த்ததெனப்பலதார்கள்சூட்டி
யோராடியகொண்டலின்மின்னலையிட்டதேபோற்
சீராடுதலைப்பணியுத்திதிருத்தினளே. ௱௧௮

கருமைக்குழல்விண்டுளிநுண்டுளிகாட்டுமாபோற்
பருமுத்தணிதொங்கலிசைத்தொருபட்டம்வீக்கி
யொருமைப்பிறைமேலிருபானுவுதித்தன்மான
விருமைத்திலதந்திருநெற்றியிலிட்டுமாதோ. ௱௧௯

ரூமிழ்முத்தமணிந்தனள்கொவ்வைமூகிழ்க்குமுத்தி
னமரத்தவமூசியினிற்குமோரரமேபோற்
கமழ்பொற்குழையிற்குழைசாத்தினள்கால்நீல
முமிழ்கட்கடலிற்புடைபாய்சுறவொத்துலாவ. ஙஉ0

வயிரப்பணிதங்கியகொப்புவயக்குவின்றாள்
பயில்பொற்குழையூடுருவிக்குழல்பாய்கண்வாளி
கயிலைத்தனிநாயகர்சிந்தைகவற்றுமென்றே
வெயிலைப்பொருவாவிதனைப்பொருமெனறுதாளே- ஙஉக

வருமங்கலநாணணிமல்குவலம்புரிக்கே
திருமங்கலநாணணிதாங்கமதாணிசேர்த்தித்
தருமங்கலமானதடங்கைதனைத்தினைருழ்
பெருமங்கலமார்கடகஞ்சரிசங்குபெய்தாள்- ஙஉஉ

மதர்வைத்தவிழிப்பொருகாவலஞ்செய்கார்போ
லுதநக்கெழுநஞ்செனவஞ்சனமொனறுதிட்டி
விதுவைத்தனவெள்ளிவளைக்குமுகிழ்த்தகஞ்சங்
கதிர்வைத்துவிரிததனபோற்கணையாழியிட்டாள்- ஙஉங

எழுமுத்தலமீன்றனவுமுற்றுவதின்றிமுற்றுச்
செழுமுத்தமுலைத்துணைமுக்கணர்செவ்வியெய்தக்
கெழுமுத்தவமெய்த்தினையென்றுகிளத்துபைம்பூண்
முழுமுத்தமிடறகிணைமுத்தணியாரமிட்டாள்- ஙஉச

பொருத்தின்றின்முளைத்தகரும்பொடுவல்லிபோலு
முருகூரதொயில்குங்குமமானமதமொனறுதிட்டிப்
பருமம்பெருமேகலைதாதுபணிக்கலாப
மருமெனகலைசுற்றிமருங்குலைவாட்டினாள்- ஙஉரு

போதுங்கலனூரதிருமேனிபொதிந்துநின்றீ
ரோதினறுசெயுங்கொன்மருங்கெனவேங்குமாபோற்
பாதங்கள்புலம்புசிலம்பொடுபாதசால
கிதம்பொலிகிணகிணிதண்டைகிளர்த்தியிட்டாள்- ஙஉகா

வேறு.

பொருப்பினுக்கரசனீன்றபுன்னைமலர்க்கொம்பனைளை
யருத்தியாலவலங்கொண்டேகியவரிமணிக்காப்புச்சாத்திக்
கருப்புரதீபஞ்சுற்றிக்கண்ணெச்சில்கழித்துநிலாரு
டிருப்பதம்பரவிமுன்னேதிருப்பதம்பெறறசெல்வி. ஙஉஎ

முனிவரொழுவர்போநதமுகுர்ததம்வந்துற்றவாற்றுற்
பனிவரையரசைநோக்கிப்பாவையைக்கொணர்வாயென்ன
ரனியவனருளாறபோநதுசனிர்வரைக்குலத்துமாதர்
புனிதநாயகிமுன்கூறப்பொருக்கெனவெழுநதாண்மன்னோ. ஙஉஅ

செல்வியுமதரவாணிதேவியுமெழுந்துபோற்றி
மெல்விரற்றனிர்க்கையேந்தவியன்வலமிடப்பால்பற்றி
யெல்விரிகாலைமாலையேத்துவார்தமக்கேசெல்வங்
கல்வியுங்கதியுநல்குங்கரதலத்தியற்கைகாட்டி. ௱௫௯

அலத்தகமுறுத்ததாளிலயிராணிமலர்கவே
பலப்பலசிலம்புதண்டையயப்பயப்பயவென்றார்ப்பத்
திலத்தமைதூசுதாங்கச்செய்மகண்மருங்குகாப்ப
கலத்தகுங்கங்கையாதிநங்கையர்கவரிகாட்ட. ௱௬௰

உருப்பசிகளாஞ்சிதாங்கயோகினியடைப்பையேந்த
விரிப்புறுவடைப்பாவாடைமேனகைவிரிப்பயாண்டும்
பருப்பதக்குலத்துமாதர்பணித்துனிதெறிப்பவேதந்
திருப்பல்லாண்டிசைப்பத்தெய்வச்சிலதியர்சுண்ணந்தூவ. ௱௬௧

கின்னரமகளிர்பாடக்கிரியரமகளிர்வாழ்த்தப்
பன்னகர்குலத்துமாதர்பன்மணிவிளக்கமேந்த
வன்னமென்பெடையுநாணவணிமலர்க்கொம்பர்நாப்பட்
பொன்னிளங்கொடிபோலொல்கிப்பொருப்பிளம்பிடிபோற்சென்றாள். ௱௬௨

குலத்திரள்கொங்கைகாட்டகுணத்திரள்வடிவுகாட்ட
நலத்திரள்சுமாதுதொய்யுநாணமலர்க்கொம்புபோல
நிலத்திடையிறைஞ்சியேகிநீணிரீத்தவிசிலெம்மான்
வலப்புறத்திருந்தான்வல்லிமதியுடனவிதிசேர்ந்தென்ன. ௱௬௩

மண்பெற்றார்சுவர்க்கம்பெற்றார்வரைபெற்றார்திரைகள்பெற்றார்
விண்பெற்றார்புவனமூன்றுமிகப்பெற்றார்மகப்பெற்றாரிற்
பெண்பெற்றார்க்கெய்தாப்பேறுபெற்றனனிமையவேந்தன்
கண்பெற்றான்றுபெற்றார்காட்சியாறபெறும்பேறெல்லாம் ௱௬௪

இன்னணநிகழுமெல்வையிமையவெற்பரசிமேனை
மின்னனூர்தகம்பிலேந்தும்விசும்புதோய்கங்கைநீராற்
சின்னவெண்பிறைசேர்மோலித்தேவனெம்பெருமான்கஞ்சப்
பொன்னடிவிளக்கிச்சாந்தாற்பூவினாற்பூசைசெய்தாள். ௱௬௫

அந்நிலையிமையவேந்தனருந்தவக்கொழுந்தின்செங்கைக்
கன்னியம்புயத்தைமுக்கட்கருணையங்கடலின்பாணி
மன்னுறவமைத்துப்போற்றிமங்கலச்சொல்லால்வாழ்த்திப்
பன்னெடும்புவனவாழ்க்கைப்பயிர்தழைத்திடநீர்வார்த்தான். ௱௬௬

முழங்கினமுரசபேரிமுழங்கினதுடிதடாரி
முழங்கினசுருதிவேதமுழங்கினபணிலநாத
முழங்கினமுனிவராசிமுழங்கினாடனகீதே
முழங்கினகுரவைபோலசமுழங்கினதிசைகடோறும். ௱௬௭

ஆடினர்பவுரிமென்மேலார்த்தனர்சிரமேற்செங்கை
சூடினரனந்தானந்தத்துறைபடிந்தாடியாடிப்
பாடினர்பரமகீதம்பரவினரழியாவின்ப
தேடினரகிலநாதன்றிருமணங்கண்டோரெல்லாம். ௱௩௮

தாமரையுழவன்வேதச்சடங்கெனுந்திரளேர்ப்பூட்டி
யோமமன்னிலஞ்செய்யாகவுயர்திரவியங்கள்வித்திக்
காமருதேனுநெய்யாங்கமழ்புனல்வார்ப்பவார்ப்ப
மாமகப்பயிராஞ்செந்தீவலஞ்சுழித்தெழுந்ததன்றே. ௱௩௯

குணின்முரசியம்பவொற்றைவலம்புரிகுளிறவாணி
துணைவனைசடங்குசெய்யச்சுருதிமங்கலநாண்சாத்தி
யிணையிலிமுக்கணெம்மானிமையமான்மலர்க்கைபற்றி
மணநிறைகோலங்காட்டிவானவர்வாழ்த்தநின்றார். ௱௪௰

பிலத்துறைவேந்தனோராயிரப்பெருந்தீபமேந்த
மலர்த்திருமகள்கொண்டாடவாணிமங்களங்கள்பாடக்
குலக்கிரிமகள்பின்னேகக்கொழுந்தழல்வலங்கொண்டேகி
நலத்தகுபொரிகநீவிநயம்பெறுவேள்வியாற்றி. ௱௪௧

செப்பொடுபணைந்தகொங்கைத்திருப்புயங்காணுந்தோறுங்
கொப்பொடும்பொருவாட்கண்ணுள்குலத்தொடுபணைப்புக்காட்டக்
கைபபிடிததருளுங்கையாற்காலபிடித்தம்மிசேர்த்தி
மெய்ப்புகழ்வசிட்டன்றேவிவிண்ணிடைப்பரவக்காட்டி. ௱௪௨

மருமலர்விதானவேள்விமண்டபங்கடந்துள்போகித்
திருமணவறையின்மேவித்தேவியுந்தாமுமாக
வருண்மணக்கோலக்காட்சியருளிவீற்றிருந்தார்மன்னோ
கருதுவார்கருதும்வண்ணங்காட்சிதந்தருளும்வள்ளல். ௱௪௩

வருக்கையின்சுளையும்பாலும்வாழைமென்கனியும்பாகு
மருத்திமாம்பழமுந்தேனுமமிழ்தெனத்திருத்தியனபாற
பருப்பதத்திறைவன்செம்பொற்பாசனத்தமைப்பநாதர்
திருக்கைதொட்டுவந்தோமென்றார்செகமெலாநிறைந்ததம்மா. ௱௪௪

வாசனைச்சுகந்தம்பன்னீர்மணங்கெழுதெய்வச்சாந்த
மீசனெம்பெருமான்முன்னரியற்றினனுவப்பப்பின்னர்ப
பாசனநிமலச்சேடம்பரிசனத்தவர்களேந்தத்
தேசனதருளாலுய்த்தான்றிருமணக்குழுவுக்கெல்லாம். ௱௪௫

நிமலர்பாற்கழித்தசேடநின்மலவுணவைத்தேவ
ரமரர்கோன்முனிவர்பூதருருத்திரரயன்மாலாதி
யிமவரைக்கிறைவன்மேனையேனையசுற்றத்தாருந்
நியிலமுற்றருந்திச்செனவிதெளித்தனர்களித்தார்மன்னோ. ௱௪௬

சொல்லறிவின்றூர்வீறுந் தாவறந்திருந்தார்பேறு
மில்லறம்புரிவார்தம்மாலியையவதால்துவயாரக்கு
நல்லறமெனவேவானுஞானமுந்தெளியக்காட்டி
மெல்லறலனையகூந்தன்மணந்துவீற்றிருந்தாரெங்கோன் ௩௪௭

மாமனூர் பரவத்தெய்வமலையாட்டிமகிழவைகிச்
சோமனூர்புனைந்தவேணித்துங்கனாமரர்வேண்டக்
காமனூராவிமீட்டுக்கவுரியுந்தாமுமாகப்
பூமனூரணனும்போற்றக்கயிலையம்பொருப்பிற்போந்தார். ௩௪௮

திருப்பொலிமழுவாளங்கைச்சிவபிரான்கயிலைமேவி
மருப்பொலிகுழலுந்தாமுமடங்கலாசனத்துவைகி
யுருத்திராயனமாலாதியும்பர்மாமுனிவர்க்கெல்லாம்
விருப்பொடுசிறப்புநல்கிவிடைகொடுத்தருளப்போந்தார். ௩௪௯

கயிலைபால்வரையினமேயகண்ணுதற்கருணைமேக்குஞ்
சயிலமின்றொருபான்மேவித்தண்ணளிபொழிதலாலே
பயில்வனவூர்வனநிற்பபறப்பனநடப்பவாதி
யுயிரெலாம்பயிராயீராழுலகெலாந்தழைத்தமாதோ. ௩௫௰

மவுனநாண்மவுனமுற்றூர்மடந்தையைமணந்தனான்றே
பவனமேலவிண்மேனமண்மேற்பரந்தபாதலமேன்மற்றைப்
புவனமேலுள்ளோரெல்லாம்புவனபோகங்கள்பெற்றூர்
சிவனதுசெயலேயல்லாற்செயலுண்டோவுலகுக்கெல்லாம். ௩௫௧

சூரினலலக்கணெய்தித்துயர்பெரிதாற்றூராகி
மேருவின்மறைந்துவைகும்விரிஞ்சன்மான்முதலாம்விண்ணோர்
காரியல்கண்டத்தண்ணல்கயிலையின்முறையிட்டார்க்கு
பேரிழையொருபால்வைகுநின்மலன்கருணைகூர்ந்து. ௩௫௨

முந்திராசியுமாகமூவிருமுகமாய்த்தோன்றிச்
செந்தழறபொறிகளாறுந்தந்தனர்தேவருய்ய
வந்தயாப்பொறியைக்காலுமங்கியுங்கங்கைசேர்ப்ப
வுந்துவானதிகொண்டேகிச்சரவணத்துய்த்ததன்றே. ௩௫௩

இமையமேற்சரவணப்பூந்தடத்தினிலெய்திவாசக்
கமலமேற்பொறிகளாறுங்கண்ணுதலருளினாலே
யமர்தருகுழவியாறாயாறுமீன்முலைப்பாலுண்டு
தமரீருலகுமவானுந்தழைந்திடவளருங்காலை. ௩௫௪

எந்தையாருடனபூவைவியெய்தினளிமையச்செல்வி
மைந்தவொன்றெம்பபவாறுவடிவமும்படிவமொன்று
யந்தமார்முகங்களாறுமம்பிகைமுலைப்பாலுண்டு
கந்தவேனெனப்பேர்கொண்டுகயிலையின்வளர்ந்தான்மன்றே. ௩௫௫

அன்னவனண்டகூடமலைத்தெழுதகர்மேற்றாவி
நன்னவவீரர்சூழமேடமேஷஞாயிற்றனைப்
பொன்னமர்பொருப்பும்பொன்னாட்டிறைவனும்புத்தேள்யாரும்
வென்னிடக்கதிரடாத்திவிதிசிறையமைத்துமாற்றி. ௱௫௬

மிறைபுரிகொடுஞ்சூரிட்டவிண்ணவர்சிறையைமீட்பான்
முறையிடுமகவானாதிமுதல்வர்பாலிரங்கிமுக்கட்
கறைமிடற்றண்ணலீவக்கண்களாயிரத்தோனை
சிறைமயிலூர்ந்துசோதிச்செல்வனுஞ்சேவலேந்தி. ௱௫௭

உருத்திரர்கொடுத்ததானைபதினொருகரத்துமோங்க
வருத்திபூலகிலநாதனருளும்வேலொருகைதாங்கிக்
கிருத்திமத்தானைவெள்ளங்கிளர்தரத்தானைவர்சூழ
மருத்துவர்முதலோர்நோய்க்குமருத்துவனெனவேபோந்து. ௱௫௮

வண்கடல்சுவற்றிக்குன்றமெறிந்துவல்லசுரர்சேனைத்
தெண்கடலனைத்துஞ்செவ்வேல்வடவனற்கீந்தருத
நன்கடல்புரிந்துவீழ்த்துநனிகடவுளரைமீட்டுப்
பின்கடன்மிசையோர்பானுப்பிறையுடனுதித்தாலென்ன. ௱௫௯

மரகதக்கலாபதுங்கமணியணிவிழிமயூரக்
குரகதமுகைத்துவெண்பாற்குக்குடத்துவசமேந்திச்
சுரர்குழாத்தேகிச்சோதூர்த்துறையெழீஇத்திரிகூடத்துத்
தரணிபீடத்துநீங்காத்தந்தையாபாதம்போற்றி. ௱௬௰

புரந்தான்மகளைவெற்பின்புள்ளிமான்மகளைவேட்டுப்
பரங்கிரிதணியனமேவிப்பரவுகுன்றிடந்தோறாடி
வரங்கெழுகயிலைநண்ணிக்கந்தவெற்புறைதனமான
வரன்றிரிகூடம்போற்றியிலஞ்சியிலமர்ந்தானையன் ௱௬௧

தேவர்தன்றேவர்தேவன்றிருமணப்பொலிவீதென்று
தாபதர்க்குணர்த்தப்பின்னுந்தமிழ்முனிதென்பாற்சென்று
மேவரும்புதுமையாவுந்தொகையுறவிளம்பாநின்றா
யாவலின்விரிவாயெங்கட்கருளெனவறைவான்சூதன். ௱௬௨

௨-வது—திருமணச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௨௱௰௫.

---

## ௩-வது-திருமால்சிவபிரானானசருக்கம்.

ஐந்துநூற்றிரட்டியுடனிருநாலண்டமரசுசெயுஞ்சூர்மாய்ப்பவடல்வேலேந்திச் செந்தின்மாநகரில்வருகுமரவேட்குச்செங்கண்மாலயன்றேவர்சபையினூடே விநதைவான்சுரர்குருவாய்புதைத்துப்போற்றிவிண்ணப்பஞ்செய்ததெனத்திருக்குறாலத், தெனவதுமால்வடிவுசிவவடிவமாகவிருந்தருளுமகிமையெடுத்திசைப்பதானன்.

கற்றரும்பலகலைநூற்கவிவல்லோர்க்குங்கதியுகன்முத்தமழலுடையீர்கயிலைச்சாரன்
முற்றலினுயர்ந்தகுறும்பலவின்மேவுமுதலைப்போலுயர்கருணைமுதலுமாதிக்
குற்றாலம்போலுயர்ந்ததலமுஞ்சைவக்குறுமுனிபோன்மாதவனுந்திரிகூடத்து
வற்றாதவடவருவிநிகர்க்குந்தெய்வவரைநதியுந்திரிபுவனவரையிலுண்டோ. ௨

மூவுலகும்பனிவரைமேன்மொய்த்ததாலே முற்பயதிசைதெற்குயர்ந்துவடபாற்றாழ்ந்த, பூவுலகின்பெருங்கோட்டந்தவிர்க்கவேண்டிப்புரந்தரன்மாலயன்முதலாம்வானோர்சங்கம், யாவுமெதிர்நிற்கவுநீபோதாவென்னவெம்பிரான்பிறைமவுலித்தம்பிரானார், தேவர்பிரான்றிருவாக்காலருளிச்செய்தான்சிறியதொருகுறுமுனிவன்பெருமையம்மா. ௩

விரிகூடவிரித்ததமிழ்முனிக்குநாதன்மிக்கபுடார்ச்சுனபுரத்துமாலாமெய்ம்மைப்
புரிகூடமுடித்தசடைப்பரமனுக்கிப்பூசைசெய்துவருவைகடங்காண்பாயென்ன
வரிகூடவயன்றேடிக்காணுதவண்ணனார்திருவாக்காலருளிச்செய்த
திரிகூடவரைநோக்கிச்சிந்தைகூடச்செய்தவமுங்கைகூடச்செல்லுகின்றான்- ௪

வேறு.

வரதனருளாலிமையமலைகடந்துகலைகடந்தமலையயோகி
பாதனுறைகருமகண்டமொன்பதுபாகத்திலெண்மர்பாகநீக்கி
விரதநெறிக்குமரிகண்டமாயிரம்யோசனைக்குள்வந்துவிசையத்தண்டங்
கரதலத்துமணிவிளக்காக்கவுஞ்சவரையிருட்படலங்கடந்துபோகி. ௫

எந்தைகுமரப்பெருமானேகுநெடும்படைவேலாலிமைப்பினீறாச்
சிந்திடுதியெனச்சாபவாக்களைத்துக்குடுமிதொறுந்தெய்வச்சாபக்
கந்தரஞ்சேர்கேதாரவரையணுகிச்சிவபெருமான்கழல்கள்போற்றி
மைந்தனுந்தன்றேவியும்வாழ்விதர்ப்பநாடணைந்துவளர்காசிமன்னி. ௬

மேருவுடன்பனைப்பாகியாழ்முனிவன்புணர்ப்பதனால்விந்தஞ்சோம
சூரியரைமடுத்துலகினெறிதடுத்துக்குறுமுனியுந்துன்றுதோங்கி
நேரியர்க்கும்பூரியர்க்கும்மூன்றிரண்டொன்றெனத்தேருநெறியுந்தீர்ந்து
சீரியரல்லார்க்குவாதசெல்வம்போலிறுமாந்துதிமிர்த்ததன்றே. ௭

காவிந்தவரைவளர்ந்ததெவ்வளவோவவ்வளவுங்கையைநீட்டி
யரவிந்தமசலமிசைக்கவித்தெனக்குடுமிபற்றியவனிதாழ்ப்பத்
தாவிந்தருறைமனத்தாயுய்வதருளெனவுறுசெவனிதாழ்த்தம்மா
வரவிந்தமுறையெனமேல்வரமுன்னேயறிவர்வந்தாலறிவர்கீழோர்- ௮

செம்புவரைதனிலேகிவெள்ளிவரைக்கிவ்வழிநான்செல்லுங்காறும்
வெம்புவரைக்குடுமிபடிந்திவ்வாறுகிடத்தியெனவிளம்பியாதச்
சம்புவரைநாண்மகிலாஞ்சாதிமிருகாதிகள்சஞ்சரிக்குங்கான்போய்
நம்புவரைச்சலம்வருத்தம்வில்வலனவாதாவிவனநண்ணினான்- ௯

உருத்திராவனந்தனக்குவருவதுணரான்வருவதுணர்ந்துமேனுன்
விருத்திராசுரனெனுநம்மேலோனைமுடிப்பதற்காவேலையுண்ட

குருத்திராவடமுனியைவெல்லவிதுகருணமெனக்கூறிப்பினேர்ந்து
கருத்திராவணமிருண்டவில்வலன்மெய்த்தவவேடங்கரவிறபூண்டான். ௰

குறுமுனிமுன்போய்விருந்துவிளம்பியொருகருத்தையுய்த்துக்குறைதீரன்ன
மறுமுனிதண்டுலத்தமைத்துக்கருணைவாதாவிதனைமறிசெய்தாக்கி
யுறுமுனிவுவிருப்பகன்றுண்டதறபினயன்வரத்தாலொருகாற்கூவக்
கறுமுனிமுன்கறியானுமறியாசெமுனியுதரங்கலக்காநின்றான். ௧௧

அன்னவன்வஞ்சனையோர்ந்துபரமன்வரத்தான்முனிவனகங்கையாலே
தன்னகடுதைவரலுந்தலைவனுண்டகாளமெனச்சமித்தான்பின்னோன்
முன்னவன்வெஞ்செருப்பயிலமுன்னுதலுந்தருப்பையினான்முடித்துவீட்டித்
துன்னுபுஃறுகோதமியிற்படிந்தாடிமல்லிகார்ச்சுனமும்போற்றி. ௧௨

ஆனதாலகபதகிரிசென்னகிபடிந்துகாஞ்சிநகராருணைபோற்றி
ஞானதுங்கர்முத்தாருகிருமுதுகுன்றமும்பரவிசயப்பாலேகும்
பீனகும்பசம்பவனைவில்வலன்வாதாவிகொடும்பிரமச்சாயை
கானமெய்க்குறைதொடராதுதொடர்ந்தலைத்ததாலாறலைக்குங்கள்வர்போல. ௧௩

அங்கிருந்துமறைச்சிறுவரிருவர்போலுருவெடுக்குமடுக்குநீங்த
மெங்கிருந்துமிகலவிளைக்கும்பழிகுறிக்கும்வழிமறிக்குமிவைகடர்ப்பான்
கொங்கிருந்துசிவபரனைக்குறுமுனிபூசனைபுரிந்தான்குலிசவேந்தன்
பொங்கிருந்தண்காவிரிக்காப்புகலிதனிற்கயமுகனைப்பூசைசெய்வான். ௧௪

வேறு.

ஆவினிலைந்துபலோதகமைந்தோடைவகைத்திரவியமைவகையமிர்த
நாவிமதங்கமழசாந்தமுமாட்டிநறகலைபூண்மலர்மாலையணிந்து
தூவியபாசிதபாயசமன்னஞ்சுவைதருமோதகம்வடையுவல்கன்னல்
மேவியபணணியமுப்பழமபயமிக்கநிவேதனமொக்கவமைத்து ௧௫

தூபமுடன்பலதீபமியற்றிச்சோதிதரும்படிமக்கலமேற்றி
மாபலசத்திரசாமரமேந்திமறைபயிலாயிரநாமமுமோதித்
தாபனமந்திரவோமமியற்றிச்சயசயசயவெனவானவர்வாழ்த்தத்
தீபமெனுங்கயமாமுகவாழ்வைச்செஞ்சரணிற்சரணென்றுபணிந்தான். ௧௬

படலையின்மலரறுகணிபவசரணம்பணிவளைமகளபெறுதனிமுதல்சரண
நடமிடுபரிபுரபதயுகசரணந்திபதிந்திபதியதிபதிசரண
கடனமடையெனவருமதமலைசரணங்கயமுகநிசிசரனவயவரிசரணஞ்
சுடரிகர்தடவயிறுடையவசரணசுகுணதரசிவசுதகணபதிசரணம். ௧௭

முடியடிதெரிவருமுதியவசரணமுறைதெரிமறையவரிறையவசரணம்
வடிவினிலுயரியபெரியவசரணம்வலவையையமருவியபுயதரசரண
நெடியவனவிழிதருநெடியவசரணநினைபவர்பவமறநினைபவசரண
மடியவர்வினைகெடவருள்பவசரணமரகரசிவசுதகணபதிசரணம். ௧௮

வேறு.

எனவருச்சனைசெய்வான்முன்னெழிற்கரமைந்துநான்கு
கனவரைப்புயமுந்தோன்றக்கடகரிமுகத்தெங்கோமான்
றினகரோதயம்போல்வந்தான்றேவர்கோன்விழிகளெல்லாம்
வனருகக்காடுபோலமலர்ந்தனன்வணங்கிவீழ்ந்தான். ௧௯

பாகசாதனனையன்பாலங்குசபாசச்செங்கை
யாகுவாகனத்துமுக்கணைங்கரத்தானைநோக்கி
யோகையாலுனதுபூசைதோத்திரமுவந்தோம்வேண்டும்
வாகைசேர்வரங்கள்கேண்மோவென்னலும்வணங்கிவாழ்த்தி. ௨0

பாதனமுமையாள்பாகப்பரன்றிருப்பள்ளித்தாம
நந்தனவனங்கள்வாடிநலிந்தனதழைக்கும்வண்ணம்
சந்தனவனங்கள்சூழ்ந்தனிவரைமுனிவன்கைமேல்
வந்தனள்பொன்னியீண்டுவரப்பணித்தருள்வாயென்றான். ௨௧

காண்டகுமண்டங்காக்கையெனக்கயமுகந்தோனசெல்லச்
சேண்டகையண்டங்காக்கைத்தேவனென்றுணரான்கும்பன்
கூண்டகைநீட்டியோச்சக்கும்பநீர்றண்டதனாலே
யாண்டகைகவிழ்ப்பப்பொன்னியருள்வழிப்பார்மேற்புக்காள். ௨௨

புக்கபாரிடந்துபாரப்பொருப்பினையெடுத்துவாரிச்
சக்கரஞ்சங்கமேந்தித்தடம்பணைமருதமுந்தி
நெக்கநீர்ப்புள்வாய்போழ்ந்துநெடியபேரம்பினாலே
மைக்கடல்கிழித்துநேமிவளருமால்பொருவும்பொன்னி. ௨௩

பொன்னியைப்பிரித்தபிள்ளைபூசுரப்பிள்ளையாகச்
சென்னியிற்செங்கைதாக்கச்சேறலுமஞ்சினான்போ
லன்னியனணியனாகியானைகடோறுமோடிப்
பன்னிசைமுனியோடாடல்பலபலபயின்றனையன். ௨௪

பாரின்மேற்படர்ந்துமேழுபரவைமேற்கடந்தும்பார
மேருமேன்மிதந்துத்தாவிவிண்ணின்மேற்குதித்தும்வேண்டுஞ்
சாரிமேல்வினைத்தானையன்றமிழ்முனியினைத்தானம்மா
வாரியன்மகிமைபார்க்கிலாதியம்பரனேயென்றனை. ௨௫

குறுமுனிமெலிவுநோக்கிக்குஞ்சரமுகத்தெங்கோமா
னுறுதனிப்பிறைவெண்கோடுமுபையபாதமுமுக்கண்ணுஞ்
செறிதிருப்புயங்களானதுஞ்செழுமலர்க்கரமோரைந்து
மறுகணிமுடியுந்தோன்றவருளொடுந்தோன்றுநின்றான். ௨௬

நம்பியோவிதற்காவந்தானுனிதோகொடுமைசெய்தே
னெம்பிரான்சென்னிதாக்கவெடுத்தகையிதுவோவென்று
பம்புதன்சென்னிசெந்நீர்பறிபடநின்றுதாக்குங்
கும்பமாமுனியைநோக்கிக்கும்பமாமுகத்தெங்கோமான். ௨௭

மாதவஞ்சேல்சென்னிவருந்தநின்சென்னிதாக்கு
மீதுவந்தனையாக்கொண்டோமிவ்வணம்புரிவார்க்கெல்லாங்
கோதிலாக்கதிகள்செல்வங்கொடுக்கின்றோநினக்குவேண்டுங்
காதல்சேர்வரங்கள்கேண்மோகருதினதருதுமென்றான். ௨௮

ஏகமண்டலத்துநன்னீர்நிறைத்தருளெனலுநாதன்
மேகமண்டலத்துமுந்நீர்மிசைந்தெனத்துதிக்கைநீட்டி
மாகமண்டலத்துவாரிமானுகாவிரிநீர்வாரிக்
காகமண்டலத்திற்சாய்த்தகரகமண்டலத்திற்பெய்தான். ௨௯

கரகநீர்ப்பெருக்கும்பார்மேற்காவிரிப்பெருக்குநோக்கிப்
புரகரன்றனின்மிக்காம்புதல்வன்மெய்யருளென்றேத்திச்
சிரகரகம்பஞ்செய்துதெண்டனிட்டிறைவனருக்
குரகதம்வடபாற்செல்லக்குறுமுனிதென்பாற்சென்றான். ௩௰

சுழியெறிதரங்கப்பொன்னித்துறைகெழுகுடந்தையாரூர்
வழிபுனற்றிருவையாறுவலஞ்சுழிமருதூர்மாயன்
விழிதுயிலரங்கங்காவைவெண்காடுமறைக்காடேத்திச்
செழுமறைப்பொருளார்தொல்லைதில்லைமாநடனம்போற்றி. ௩௧

தருபுனற்செழுங்காவேரிச்சங்கமத்துறைநீராடிக்
குரைகடற்சேதுமேவிக்கொடுங்குன்றங்கானைபுத்தூர்
பரமரேடகமாடானைபரங்கிரிமதுரைநெல்லைத்
திருநகர்பரவிப்போந்தான்றென்றிசைதழைக்கவந்தான். ௩௨

இருஞ்சிவலிங்கமாக்கியிடந்தொறுமருச்சித்தேத்தி
வருந்தமிழ்ப்பொதியமேவிவடதிசைக்கனமுந்தென்பாற்
பெருந்திசைமெலிவுந்தீர்த்தான்பிறவியாம்பிணியைத்தீர்க்கு
மருந்திருமருந்தைக்காண்பானணிதிரிகூடஞ்சார்ந்தான். ௩௩

கவனவெங்கானநீங்கிக்கடவுளர்திருக்குற்றாலம்
புவனமார்நாரோதசமைந்திற்புகுதலும்புனிதத்தென்றல்
வெமணம்வீசக்கண்டுதெய்வமாமுனிமுன்செய்யுந்
தவமினிப்பலித்ததென்றுதடம்புயநடிப்பச்சென்றான். ௩௪

நாற்கடல்கடந்தமேலோனுவலருந்திரிகூடத்து
மேற்கடுவிடமுண்டாரோவிண்டுவாயிருந்தாரொன்று
✠ நாற்கடவுளரும்போற்றுநன்னகர்த்திசைகள்சூழ்ந்து
பாற்கடல்கிடந்தாலென்னப்பங்கயத்தடங்கள்கண்டான். ௩௫

---

✠ நாற்கடவுளர்-மனுக்கள்பதினால்வருள் ஏழாவதாவைவச்சுதமனுவினதாட்சியாகிய இக்காலத்து ஆதித்தியர் உருத்திரர் வசுக்கள் மருத்துவர் என நான்குவகுப்பினரா யிருப்பவர். இவர்முறையே பன்னிருகோடியர் பதினொருகோடியர் எண்கோடியர் இருகோடியர் எனமுப்பத்துமுக்கோடிதேவராவார். இவ்வாறுமற்றைமனுவந்தரங் களிலேயும் பற்பலநாமவகுப்பினராயும் பற்பலதொகையினராயும் வகுத்தெண் ணப்படுவார்கள்.

அறத்துன்றமுனிவன்வாவியருகுறையுணுங்காலை
நிறைப்புனல்களைமேற்றாவிநெடுந்திரைசுருட்டுந்தோற்றம்
புறத்துறுசமையத்தோரைப்போகெனப்புறங்கையோச்சி
விறற்சிவசமையத்தோரைவிரைவுடனழைத்தன்மானும். ௫௬

செறிதடங்கரையின்மீதேசெழுந்திரைகொழிக்குமுத்த
நறியபூந்திருவெண்ணீற்றுநாயன்மார்வருதல்போலும்
மெறிபுனற்றிரையினூடேயெழுகயன்மறையுந்தோற்ற
மறுபுலச்சமயத்தோர்கள் வயின்வயினொளித்தனமானும். ௫௭

உரவுநீர்த்துறைமண்டுகமொலிபடுமுனியைக்கண்டே
யரவொலிபரப்புந்தொண்டரார்ப்பொலிநிறைத்தல்போலும்
விரவுநீரமுததாரைவிண்மிசைப்பொழிந்தன்முக்கட்
புரமெரன்கருணைமாரிபொழிவதுபோலுமாதோ. ௫௮

காஞ்சிசூழ்கழனிதோறுங்கமழ்கள்கண்வெடித்தமுத்தந்
தாஞ்சிலர்வருவார்போவார்தாரதிசைகணிகைமாரபோற்
பாஞ்சராத்திரிகடம்மைப்பழித்திடுகையைப்போலும்
வாஞ்சைசேர்சைவர்க்கண்டுமகிழ்தருமுறுவல்போலும். ௫௯

அரத்தநெட்டிலையாங்காவியணிநறுந்திலர்ந்தடிச்
சிரத்தினிற்கதிர்களாயசெஞ்சடைபின்னிச்சென்னி
தரத்துறவளர்ந்தசென்னல்சைவமாமுனியையீண்டு
வரத்தவம்புரிந்தோமெனவணங்குமாமுனிவர்போலும். ௬௰

வருபுனற்புகலிவேந்தர்வழுதிநோயொழித்தகாலை
யிருமனத்தருகர்போலுமிடைபழம்பழுத்தவாழை
விரிகனற்புனலிலேய்வென்றகூழ்விருப்பாஞ்சைவத்
தொருமனத்தவர்போலுமொளிறுசெம்பழுக்காய்ப்பூகம். ௬௧

ஊறிடுமலர்த்தேனூடியுவந்துதாதாடுந்தும்பி
யாறிடுதடத்திலீசனடியராய்முழுகித்தெய்வ
நீறிடுவாரைப்போலுநீறணிதொண்டர்க்கெல்லாஞ்
சோறிடுவாரைப்போலுமகரந்தஞ்சொரியுங்கைதை. ௬௨

புண்டரீகத்திளவாவிப்புடார்ச்சுனபுரத்தினெல்லை
யொண்டவமுனிவன்செல்லவுதையவன்மறைந்தோற்றம்
பண்டுசேர்தக்கன்வேள்விப்பயத்தினிறைசமையபேதங்
கொண்டவர்குழாத்துநின்றான்குளறுபுக்கொளித்தல்போலும். ௬௩

ஒழுகுநீர்த்தடங்கடோறுமோங்குசீர்ப்பழனங்தோறுஞ்
செழுமுகையுடைந்துநீலந்திசைதொறுமலர்ந்ததோற்ற
மெழுபெரும்புணரியுண்டான்குறுமுனிவனேவெனப்
பழுதிலாவிரும்பூசெய்திப்புனன்மகள்பார்த்தல்போலும். ௬௪

முறையிதுவாமென்றுணர்த்திச்சவுனகாதி முனிவர்குழாம்புகழ்ந்துநனிவேண்டச்
சூதன், விறல்கெழுசித்திரப்பொதுவநதரங்கக்கூத்துவெளியரங்கம்பெறநடித்தல்
விளம்பல்செய்வான். ௨௫

௭-வது—குறமுனிவழிபடுசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௫௱௰௮.

---

## ௮-வது வாசுகிதவம்புரிந்தசருக்கம்.

போதவடிவாகியொருபூதரறியாத
நாதவெளிவீடுதனிலாடுமொருநாத
னாதிபரைகாணவருளாநடமாடு
தீதில்பரமானசபைசிற்சபையதாமால். ௧

ஆழிதிரைமண்டுபுனலண்டமிசைதாவ
லூழியுலவெங்கணுமொழிந்துமொழியாத
வாழிதிரிகூடவரைமன்றிலரனாடல்
வீழியிதழ்மாதலத்தேவொருவர்காணார். ௨

ஆதலினமகாபரமராசியமதன்றே
காதன்மறையோதுமதுகாணவெகுமாலாய்
மாதவனுநான்முகனுமாதவமுயன்றார்
தாதளவுபோதுகமழ்சண்பகவனத்தில். ௩

மாமகரமாதிமதியாறுமுயர்வானோர்
பூமன்வருச்சனைபுரிந்துதமதீசர்
தாமகவுசித்திரசபைத்திருநடத்தே
யாமகவிருப்புடனருந்தவமுயன்றார். ௪

வேறு.

உந்திபூத்தவனும்பூமேலொருவனுமகவனாதி
யந்தரத்தவருங்கும்பமுனிமுதற்றவோர்யாரும்
புந்திசேர்தவத்திலாசைபூண்டனர்திரிகூடத்தி
லெந்தையார்நடனபாதத்தியாவரோயாசைபூணார். ௫

சிவமதாகங்கைமூழ்கிச்செண்பகத்தடாகந்தோய்ந்து
நவமதுசங்கைவேய்ந்தார்நனிவடவருவியாடிப்
பவமதுகணடுவீழாப்பசியசெண்பககாவெங்கு
தவமதுவண்டுபோலமொய்த்தனதவத்தோர்சங்கம். ௬

அன்னவாறயன்மாலாதியருந்தவக்குழாங்களெல்லா
நன்னகர்ப்பரனைவாழ்த்திநற்றவம்புரியுமெல்லை
பன்னவில்காளிகூடப்பஃறலைப்பகுவாய்ப்பாந்தண்
மன்னவர்பரவுமன்னன்வாசுகியென்பானன்றே. ௭

மதுகையிலறிவின்மிக் கமணிமுடியனந்தனென்னு
முதுதவத்துவனமேனுணமுக்கணூர்தொலைத்தில்லைப்
பொதுநடம்பணிந்தானென்றும்பின்முன்றதானும்போற்றுங்
கதியினைவிழைந்துசென்றனகயிலைமால்வரையின்மீதல். அ

பொன்னுயர்பொருப்புநாதன்புயவரைதனக்குநாணக்
கொன்னுயர்புரங்கண்மூன்றுங்கோபிப்பக்குணமதானுன
பின்னுமோர்சுடலில்வெறுமைப்பிணிச்செய்துமருந்துஞ்செய்தான
மன்னுசீரவெள்ளிக்குன்றிலவரதனைவணங்கிச்சேய்தது. கூ

பொறியுடற்பாலவசெய்துபுலனகளசூத்திரங்களாக்கிக்
கறுமனப்பாசமபூட்டிக்ககலாதுமேயுழ்தாளநதாகக்
யறிதருபிரோரகங்களைநதிரூல்கைசத்துப்பேதக
குறியிருதனுவாலாட்டுங்கூத்தனேசரணமென்றன. ய

வேறு.

பணியும்பணியின்குலவேநதைப்பணியினபணியாருரேனுக்கு
மணிவெஞ்சூட்டுப்பிலவேநதுவரலாமறனையெனப்பிறவிப்
பிணியினமருந்தேயுனைக்காணும்பெற்றியருளைமறறுமமாரு
தணிவில்காதலொடும்போந்தேனருளாறசாற்றுநதருமென்றன். யக

நாதனுரையாயெனறருளநந்தியொடுஞ்சேவாயவந்தைத்துப
பூதநீதர்கங்காளர்புனிதமறைகளகாணுத
பாதநடனந்தனைக்கண்டுபணிந்தானந்தக்கடலாடுங்
காதலுடையேனெனவுரைப்பக்கவுரிமுகமபார்த்தெம்பெருமான். யஉ

சடைமேலிருக்குமபிறைநகைகொழுந்துதுள்ளாததெனப்புனனைசேர்ந்து
கடைநோக்கருளினபூதொழுககவணிவாயமலாநதயகருளசெய்வார
விடைமேறகாட்சியடியவர்கருவேணடுமவைகையாரபுரிந்தருளவோ
நடமேறபுரியும்பெருங்காட்சிநவில்வோருனகாரணத்தால. யங

அனந்தனெனபானைமைநோக்கியனநதமுகங்களருந்தவங்கணை
மனநதனவயமாபபுரிந்தமமயானமறறேருககதுலவாதெயதுஞ்
சனநதன்முதலோர்புகழ்தல்லைத்தலத்தாடனநதொழுபபெறறுன
கனநதங்கியமெய்த்தவமவனபோறபுரிநீழூழிகாலமென, யச

பொருப்பினசிலையாருரைபபவநதப்புனிதச்சிலைககுநாணுனை
பெருககயுகங்களபலவுமுனைடபிரிந்துதவங்கள்புரிந்தாறறேன
திருக்கண்களடாநதிவினையுங்காண்பர்சொலலோசிவபெருமா
னருட்கொண்டடிமைபடைத்தனையாலாளககடனேயெனப்பணிந்தான. யரு

இட்டாப்பதவிநட்ஞ்சாணக்கிடைக்கவேண்டுமெம்பெருமா
னெட்டாக்காலநதவமியற்றவியலாதெனபான்றனக்கிரங்கிக்
கட்டார்நிறைத்தபலகரும்புகறியாவண்ணஞ்செறியாகின்
வட்டாத்திரடடிவழங்குமபோறறிருவாய்மலாநதுவழங்குவார். யசா

பாடும்பூதம்பணிசெய்யப்பயில்பாண்டரங்கமன்றினிடத்
தாடுங்கூத்துங்காளிமதமடக்குங்கூத்துங்கொடுமுயலைச்
சாடுங்கூத்தும்பிறரறியத்தக்ககூத்தாமனைத்துலகுந்
தேடுங்கூத்துநன்னகர்ந்தேவியறியுந்திருக்கூத்து. ௰௭

அந்தநடனங்காண்பதற்காவரியுமயனும்வானோருந்
தொந்தசடிலப்பெருமுனிவர்குழாமும்பொதியிற்குறுமுனியு
முந்தையுகங்கள்பலதலத்துமுயன்றார்முயன்றுமுற்றாம
லிந்தயுகத்துந்தவம்புரிந்தாரொமதுதிரிகூடத்தணைந்து, ௰௮

பற்றாயிருந்துபிறதலத்துப்பல்லாயிரம்யாண்டியற்றுபலன்
குற்றாலத்திலோராண்டிற்கொடுக்குமெனுமாமறைமொழியா
லுற்றாரயன்மான்முதலோர்களுலப்பில்குளிகைகனலிலிட்டு
வெற்றாயலைந்தவாதியர்கள்வேதிக்குளிகையடைந்தாற்போல். ௰௯

சந்தமகிலுங்கிளைசுருட்டித்தரளமெறிந்துபொன்கொழித்து
நந்துதிரட்டுஞ்சித்திரமாநதித்தண்கரையிலிருபாலும்
° வந்துதவழ்செண்பகச்சோலைமருவியிருந்துதவம்புரிவார்
சிந்தைநினைந்தவரமெல்லாஞ்சித்தியாகுஞ்சத்தியமே. ௨௰

பனகவேந்தேதென்கூடற்பதியின்முதியவெள்ளிமன்றுங்
கனகசபையாம்வெளிமன்றுமாலங்காட்டினமணிமன்று
மனகநிறைதாம்பிரபொதுவுமார்க்கும்பொதுவாந்திரிகூடச்
சனகர்புகழ்சித்திரமன்றந்தனிநம்பரமரகசியமே. ௨௧

வேறு.

ஞாலமேனதிகளெல்லாம்படிந்தபலன்சித்திரமாநதியேநல்குந்
தாலமேலுயர்புனிதத்தலங்களெல்லாந்தரும்பேறுதருங்குற்றால
மூலமாரிலிங்கமெல்லாம்பரவுபலன்றிரிகூடமூர்த்திநல்கும்
வாலிதாமத்தலத்தைநோக்கிவரிலடிக்கடியோர்மகப்பேறெய்தும். ௨௨

வேறு.

உருகன்புடையாய்நிந்தறியாதொருநாளவ்வூர்வைகிடினும்
பொருகண்டகமாம்வினைநீங்கப்புகுவார்கயிலையெனப்புகன்று
மிருகண்டுவின்சீர்க்குலமகற்காவெங்கூற்றுதைத்தபெருமானார்
வருகண்டகச்சேதனன்சரிதைவாக்காலருளிவிடைகொடுத்தார். ௨௩

நஞ்சங்களிக்கும்விழிபாகர்நலஞ்சேர்கருணைக்குருகிமன
நஞ்சங்களிக்கும்விடைபெற்றுநயப்பாலேகிநதித்தடநீ
ரஞ்சங்களிக்குமணிகருவாவானபால்பிறித்துண்டடைகிடக்கு
மஞ்சங்களிக்குந்திரிகூடபுரத்திலணைந்தானரவேந்தல். ௨௪

இந்துமுடிசேர்திரிகூடமீசர்வடிவென்றேபணிந்தா
னுந்திபூத்தும்பாரிடந்துமுயர்வானளவுநீண்டதனை

° வந்து-காற்று.

லந்தகெடுமாலெனத்தொழுதானலர்பூமேலாய்த்திசைமுகத்து
வந்துமறைகண்முழங்குதலான்மலரோனென்னவணங்கினான். ௨௫

கூடமுயர்வானகடுரிஞ்சுங்குவட்டிலிருந்துகுதிப்பதனு
லாடலருவித்தேனுறுவாறெனவேயதிசயித்தா
னீடனரவப்பஃறலையானிளைத்தமணிபாலருவிதுணைச்
சேடனெனவேசிறிதயிர்த்தானசிலையான்மகவானெனத்திகைத்தான். ௨௬

அண்டரகலாதுறைவதனுலளியாப்பொருளுமளிப்பதனுல்
வண்டுபடாதசெண்பகக்காவளர்கற்பகக்காவெனமருண்டான்
பண்டையறங்கள்வளர்ப்பதனுற்பச்சைநிறத்தாற்பனைவடிவாக்
கண்டுபணிந்தான்றவப்பள்ளிமுனிவோர்கணத்தைக்கண்ணுற்றான். ௨௭

வேறு.

தொழுதகைபிணைகளாகத்துணர்ச்சடைவீழ்துவீழ்த்துப்
பழுமரமெனநிற்பாரும்பாதசெலவெலும்பமேனி
முழுதும்வன்மீகமாகிவான்மீகிமுனியொப்பாரு
மொழுகுடல்பங்கிபோர்ப்பவுரோமசனெனநிற்பாரும். ௨௮

ஒருபதமூன்றுகாலாவொருபதமெழுகாலாக
வருபதமூன்றுமோர்நடமாதவம்வளர்க்கின்றாருந்
தருபதந்தலைமேலேறி ... ... ... ாயின்மேலிருக்கின்றாரு
மிருபதநிலையென்றியமசமறறுறைகின்றாரும். ௨௯

நாசிமேலொருதாளேற்றிபொருவிரன்மேனிற்பாரு
நாசிமேறபிராணவாயுநடைதப விருக்கின்றாரும்
வாசிமேலேறிவீதிவலம்புரிமங்கையாருங்
கூசிமேற்சுடருமஞ்சக்கொழுஞ்சுடரொழுப்புவாரும். ௩௰

சருகிலையருந்துவாருநதண்புனல்பருகுவாரும்
பரிதியின்கதிருண்பாருமபவனனைப்பொசிக்கின்றாரும்
வருகனிகாய்தின்பாரும்வனத்திடைக்கிழங்குமூல
மிருபொழுதொருபோதுண்டுமின்றியுமிருக்கின்றாரும். ௩௧

தருக்களாய்நிற்கின்றாருந்தழலிடைச்சரிக்கின்றாரு
முருக்கள்போனிற்கின்றாருமூனுடனுறக்கமின்றிச்
செருக்குறவடங்கிக்கல்லாய்ச்சிலைகளாயமர்கின்றாருஞ்
சுருக்கியவுண்டியனதிப்படிவமேசுருங்காதாரும். ௩௨

மேருவின்மையக்தன்னின்மிக்குளகிரிகடம்மிற்
பாருளவனங்களாதிபற்பல்தலங்கடம்மி
லோருகநதவஞ்செய்தாருஞ்சதுர்யுகமூன்றிற்றிரு
மேருறுமனுவின்வாழ்க்கையெழுபத்தோருகநின்றாரும், ௩௩

மாயிரும்புவனஞ்சாக்குமனுக்களிரெழுவர்வாழ்க்கை
யாயிரஞ்சதுர்யுகங்கண்டயன்பகல்கழித்திட்டாரு
மேயினர்திரிகூடத்துவிரிதவம்புரிகினுரைச்
சேயுயர்பார்தள்வேந்தன்கண்டனன்றிகைத்துநின்றான். ௩௪

இன்னணம்புரிவார்முன்யானெத்தவம்புரிகேன்முக்கண்
முன்னவன்பணியாற்செய்வேன்முற்றினுமுற்றாதேனு
நன்னகர்வனத்துப்புல்லாய்நனிமரமெனநின்றாலும்
பன்னகப்பிறவிப்பாவம்பறிபடுமென்றுதேர்ந்தான். ௩௫

அந்தமாவனத்துமேவியருந்தவவேள்வியாற்றுஞ்
செந்தமிழ்முனிதாள்போற்றிச்செம்மையஞ்செழுத்தும்பெற்றுச்
சந்ததந்திருவெண்ணீறுஞ்சைவசாதனமும்பூண்டு
நந்தணிகுழையார்ப்போற்றிநனிதவக்கிழமைபூண்டான். ௩௬

வனமிசைப்பார்தள்வேந்தன்வருடமாயிரத்திரட்டி
யனிலமாகாரமாகவாயிரத்திரட்டியாண்டு
புனலிலாயிரத்திரட்டிபொருப்பிலுமவ்வாறுற்றிக்
கனலிலாயிரத்திரட்டிகடுந்தவம்புரியுங்காலை. ௩௭

தேவர்தந்தேவர்தேவன்றிருவுளமிரங்கிமைகாய்
மாவடுவனையவுண்கண்மலைமகள்வதனநோக்கிப்
பூவலர்திரிகூடத்தெம்பொதுநடங்காணவேண்டி
மேவருந்தவஞ்செய்கின்றார்விரிஞ்சனமாலாதிவிண்ணோர். ௩௮

கன்மலைமரமாய்ப்புற்றாய்க்கழிந்தனர்முனிவர்வானோர்
சன்மலிபார்தள்வேந்துநதவித்தனன்வேள்வியாற்றி
தென்மலைமுனியுந்தீராத்தவஞ்செய்தான்வாராயென்ன
நின்மலையுடனேவெள்ளித்திருமலைநீங்கிப்போந்தான். ௩௯

அ-வது வாசுகிதவம்புரிந்தசருக்கமுற்றிற்று.

ஆகத்-திருவிருத்தம்—௩௱௫௰௭.

---

## ௯ வது திருநடச்சருக்கம்.

அற்பினுலுறையும்போதுமகலுறும்போதும்வெள்ளி
வெற்பினையகலானென்னவிடையின்மேற்கொண்டோாதன்
முற்பெறுதனையன்பின்னுமுருகவேண்முனனுமேகச்
சிறபணையுடனேபோந்தானசிவதிரிகூடநோக்கி. ௧

நடித்தருளெம்பிரானூர்நன்னகர்நணுகுங்காலைப்
படித்தலமிருள்போய்ச்சோதிபரநதுதவத்தோர்க்கெல்லாங்
குடித்ததுவலைப்பாற்றிண்டோடொழுதனசிரமேற்செங்கை
பொடித்தனவுரோமமேனிபோர்த்தனபுளகப்புள்ளி. ௨

ஞானநாயகனூர்தோன்றாநற்குறியிதுவென்றோர்ந்து
தானமால்வரவுபார்க்குஞ்சாதகத்திரள்களபோலும்
பானுவினுதயம்பார்க்குநேமியம்பறவைபோலும்
வானவர்முனிவர்நின்றார்வடபெருந்திசையேநோக்கி. ௩

கருமணிமிடறுமூன்றுகண்களும்புயங்களான்குங்
குருமணிவடமுஞ்செம்பொற்கொன்றைமாலையுமூன்றூலு
மருமமும்பணிலத்தோட்டுமாசுணக்கம்பிக்காது
முருவமும்பொலிந்துதோன்றத்தோன்றினனுமையோர்பாகன். ௪

உருக்கிளர்விடைமேற்றோன்றுமும்பர்தம்பிரானூர்றய்ய
திருக்கிளர்வடிவங்கண்ணிற்கொண்டலுநதிரளாநந்தப்
பெருக்கெனும்வாரிதாவிப்பிறவிவேர்மறிநதுவீழ்ந
தருக்குலம்போலவீழ்நதுபணிந்தனர்தவத்தோரெல்லாம். ௫

இறைஞ்சினர்பணிவார்தம்மையெழுகவென்றருளாநோக்கி
நறுஞ்சினைமலர்ப்பூஞ்சோலைநன்னகர்த்திரிகூடத்துக்
குறிஞ்சியஞ்சூழற்சாரற்குறும்பலாச்சுருதிநீழற்
பிறங்குமுத்தரபாற்சென்றான்பிரணவத்துருவாய்நின்றான். ௬

தரங்கநீருலகுக்கெல்லாநதவமலாற்பொருள்வேறுண்டோ
புரந்தரனயன்மாலாதிபுலவர்மாமுனிவர்காணத்
திரம்பெறுதிருக்குற்றாலச்சித்திரப்பொதுவாநதெய்வ
வரங்கினிலாடப்போநதானகிலமுமாடல்காண்பான். ௭

வேறு.

தங்கவாணனோராயிரங்கரங்களிற்றுவைக்குமண்முழவோசை
கங்கைமாநதியாயிரமுகம்பொருகலைகடலெனவார்ப்பச்
செங்கையாயிரத்திரட்டிபானுசம்பனூர்திரட்டியூதியசங்கம்
வங்கவாரிதித்திரைகரத்தாயிரம்வலம்புரிமுழக்கேய்ப்ப. ௮

திவவியாழ்பயிலிருவரோழிசைதிருச்செவிதொறுமமுதூற்ற
நவவியாபகச்சுருதிகளாயிரநாமங்களெடுத்தோத
வுவவிவாழ்புனற்சுரநதிதிரையலைத்துக்கசீகரநதூற்றத்
தவவியாழமுநதமிழ்முனிச்சங்கமுந்தனித்தனிகளிதூங்க. ௯

ஒருகரந்தனிற்படர்கனல்சுடர்விடவொருகரந்துடியார்ப்ப
விருகரங்களில்வரதமுமபையமுமெவ்வுலகமுங்காப்ப
வருள்பரநதெழுதிருவுளக்கருணையாலகிலமுங்குளிர்தூங்கச்
செருகுகொன்றையங்கண்ணிதேனூற்றிடச்செழுமதிநிலவூற்ற ௰

மங்கையாமலையிருவிழிகளிப்புறவொருபதமலர்தூக்கிக்
கங்கவாவிடவொருபதங்குறளன்மேற்கதிகொடுசெதிதாக்கிப்
பங்கையாசனன்றுதிசெயநெடியமாற்கதிசயம்பரந்தேறச்
சங்கையேந்தியகுழைநிலாப்புயவரைத்தடந்தொறுந்தவழ்ந்தேற. ௧௧

வேறு,

புவனநாயகிதாளமாம்பொற்கலம்பிடித்துத்
திவளம்பாணியாற்பண்ணொனுந்திரளமுதாக்கிப்
பவளவாயினுலின்னிசைச்சுவைபரிமாறத்
தவளவாணிநாற்கவிவளநவரசந்தளிர்ப்ப. ௧௰

கருணைமேனிநூருயிரம்பகலொளிகமுவ
வுருவவாண்முகச்செழுமதிநகைநிலாவொழுக
விருபெரும்பொழுதுணர்கலாதியாவருந்திகைப்பக்
குருமணிக்கழலடியவர்வினையறக்குமைப்ப ௧௧

திருவிழிக்கருணைக்கடலருண்மடைதிறந்து
கருதுவார்மனக்கால்வழிகளைபுரண்டேறிப்
பருவமுற்றவர்பக்குவமுறைமுறைபாய்ந்து
சருகசித்துலர்தவமுனிக்காடெலாந்தழைப்ப. ௧௨

இடம்வலங்களுந்தெரிந்திலரிமைப்பிலாவிமையோர்
நடமுநிற்றலுங்குறித்திலனுட்டமாயிரத்தோ
னடைவுசாரிபார்த்தலைசவிலன்றிசைமுகத்தவனுங்
கடவுளோவியப்பொதுவிலோரோவியங்கடுப்ப. ௧௩

வேறு.

கண்டவப்பொலிவான்மண்டலமூன்றேருகடிமலர்த்தழைகெழுமுடியாற்
றண்டலைத்திரளோசங்கணிகுழையாற்றண்மதிமானமோமிடற்றாற்
கொண்டலைத்தரித்தமேருவோபுயத்தாறகுலவரைத்திரள்களோவெளியால்
விண்டலத்திந்திரசாலமோவெனவும்விண்ணவர்மண்ணவர்திகைப்ப. ௧௪

அலர்மதிப்பிளவுந்தும்பையந்தொடையுமறிகலாதனியினஞ்சுழலப்
பொலிதிருச்சாந்துபுயல்பொரப்புரிநூல்பொன்னுெளிமின்னுெளிபொதுள
விலகிவில்லுமிழுநதொடியணிபுயத்தில்வெண்டலைமாலைகண்மிளிரக்
கலைமதித்திரளொன்றெழுந்துசெங்கரத்துக்கணபணகங்கணங்கலிப்ப. ௧௫

புண்டவரிநவர்சிவசிவசிவவென்றேத்திடவிருவரிலொருவன்
மாண்டகவரியசரணநூபுரங்கள்கலின்கலின்கலினெனக்கலிப்ப
வாண்டகையமரர்சயசயசயவென்றார்த்திடச்சித்திரசபைக்கே
தாண்டவம்பணிவார்தமக்கெல்லாமுத்திதருந்தகுந்தகுமெனநடித்தான். ௧௬

அடித்திரளமரர்துந்துமித்திரளாஞ்சோபனக்கவுரிபொற்றாளம்
பிடிப்பளாஞ்சுருதிசுருதியாயிரமாம்பேரிசைவாக்குநாமகளே
படிப்பளாமயன்மாவிமையவர்பாவிப்பார்ப்பாரமகிலநாயகனே
நடிப்பனும்பொதுவேசித்திரப்பொதுவாநடனவில்காட்சியார்நவில்வார். ௧௭

வேறு.

அங்கணுவனதிசயத்திருநடமனந்தமாம்விழிவேண்டு
நங்கணுடுதற்கெளிவருகாட்சிநீநவினறருளெனப்போற்றிச்
செங்கணன்முதற்றேவரோத்தெடுத்தலுந்தெரிதரநடங்காட்டி
யெங்கணுயகனெழிலரியாசனத்தினிதுவீற்றிருந்தானே. ௨௰

கவரியேந்தினரம்பையர்சனகருங்காசிபன்முதலோரும்
பவுரிருஞ்சடைக்கும்பனும்புயங்கனும்பங்கயத்தயன்மாலு
மெவருமேபிராற்பரவினர்திருப்பல்லாண்டிசைத்தனர்திசைத்தேவ
ருவரிபோற்பரந்தார்த்தனர்தூர்த்தனரும்பர்மாமலர்மாரி. ௨௧

வேறு.

ஈசனையயனுமாலும்மையவாமுனிவர்யாரும்
பூசனைபுரிந்தார்மன்றேபுடார்ச்சுனபுரத்துமூன்று
யோசனையிடமும்வீரிகாத்திடவுயர்பொற்கோயில்
வாசமாம்விசையைகாப்பமணிமதில்வடுகன்காப்ப. ௨௨

தம்பிகையிசைமாதங்கியாதியம்பரனேகூத்தன்
பைம்பணியரசும்பேராற்பாதலவாசல்பேரான
கும்பனேபொதியில்வாசன்சூரவன்மால்பிரமமாறு
ரும்பர்துந்துமியினோசையொலியருத்தெய்வமன்றம். ௨௩

சயிலநீர்த்திருக்குற்றாலந்தன்னிலற்புதங்கண்டாழித்
துயிலைநீத்திருக்குமாயன்றன்மைதானுணரான்போலக்
கயிலைநீத்திருக்குமாறுகழறெனக்கருதிக்கேட்ப
மயிலைநீத்ததியாப்பாகன்மனநிலைதுளக்கிச்சொல்வான். ௨௪

மாதுமையிடத்துமீன்றமழகளிறிடத்தும்வைவேற்
காதலனிடத்தும்வெள்ளிக்கயிலையினிடத்துமிக்கா
வாதரந்திரிகூடத்திலமர்தனமுகுந்தாவிந்த
வேதராசியத்தைக்கூறேமுனக்கினிவிளம்பக்கேண்மோ. ௨௫

அண்டமுமகண்டமியாவுமழிவுறவொடுக்கிநாளும்
வண்டலரிதளவத்தாரோய்வரனமுறைவகுக்குநாளு
மொண்டொடிப்பவையும்யாமுமுறையிடமாதலாலே
தண்டலிலுலகுக்கெல்லாந்தாயகந்திருக்குற்றாலம். ௨௬

பாரினுக்கனுதியாகுற்பாரொடுசகனந்தாவு
நீரினுக்கரியதானுனெருப்பொடுசண்டவாயுப்
போரினைக்கடந்ததாகுற்புரையிலாவெமக்குமெம்பா
னூரியாம்பரைக்குநதானநன்னகரல்லாதுண்டோ ௨௭

ஆதலாலுழிதோறுமானந்தநடஞ்செய்தானம்
போதருஞ்செயல்கண்மூன்றும்புரிதருமூலட்டானக்

காதலாயுறையுந்தானங்கயிலைபோற்சிவலோகம்போ
லீதலாற்பிறிதொன்றில்லையிதுரகசியமேயாமால். ௨௮

புலந்தருந்தலங்கட்கெல்லாம்புடார்ச்சுனபுரமேமேலா
நலந்தருந்தலமாமென்றாநவிற்றலுங்கமலக்கண்ண
னிலந்தனிற்காசியாதிநிகழ்த்தியதலத்தில்யாதும்
பலந்தராதுளதோவென்னபகர்தலும்பரமமூர்த்தி. ௨௯

அருணைகேதாரநில்லைகாளத்தியாரூர்காசி
திருமறைக்காடுகாஞ்சிசெங்காடுவெண்காடாதி
யொருதலத்தோரோர்கூறேயுறைகுவர்திரிகூடத்து
திருமலைவடிவாய்ஞானக்கலையெலாநிரம்பாநிற்பேம். ௩௰

மெய்வளர்நதிகட்கெல்லாஞ்சித்திரநதிசேடஞ்
சைவமாதலங்கட்கெல்லாஞ்சண்பகாரணியமேலாந்
தெய்வமுத்தலைவெறபெல்லாஞ்சிவலிங்கவடிவமெந்தக்
கொய்மலர்தருவுநதேவர்குறும்பலாவேதமூலம். ௩௧

வேறு.

ஒருதலத்திலாயிரம்யாண்டுதவுபலனோராண்டி லுதவுங்காசி
யருணைதருமோராறுதிங்களினமுத்திங்களிலேயருளுமாரூ
ரிருமதியிற்கேதாரமொருமதியிறகோகருணமேழுநாளிற
திருவளர்நெல்வேலிதருமொருநாளிற்கொடுத்தருளுந்திருக்குற்றாலம். ௩௨

பொங்கேறுசுருதிபயில்குற்சரகோத்திரத்திலொருபுதல்வன்மேனா
ளிங்கேறிவடவருவிபடிகதொருநாட்பலனளிப்பவின்றதாதை
பங்கேறிப்பவர்க்கமெலாங்கடநதேறிச்சுவர்க்கமெனும்பதம்பெற்றானாற்
சங்கேறுதடம்புயத்தாய்சித்திரமாநதிப்பெருமைசாற்றலாமே. ௩௩

பூவுலகில்வாழ்நதிருக்குங்காலமெல்லாம்பாதகமேபுரிந்தாரோனும்
பாவனையாலச்சத்தால்விளையாட்டாலெங்கிருந்தும்பரவியோர்காற்
றேவரகசியமானதிரிகூடந்திசைநோக்கிச்செங்கைகூப்பி
காவினுனுரைப்பிரோல்வினையொழிந்துநமதுபதநண்ணுவாரோ. ௩௪

அப்பரிசுதிசைநோக்கிப்பணிந்துபுட்பகநதனைமதருகிற்சேர்ந்தான்
செப்பரிதுநெடுமாலேதிரிகூடத்தலமகிமைசெகமேலெங்கு
மிப்பதிக்கோருவமையில்லையென்பவாமன்பதைக்கிறையாயிமையோராவ
ரொப்புளதென்றுரைப்பவர்கள்கருப்பம்வீழ்ந்திணர்பாவத்துறுவாரன்றே. ௩௫

ஒப்பரியதிரிகூடவுயர்தலத்துக்கொருதலத்தையுவமையாகச்
செப்புவோரித்தலத்துச்சிவனின்மாலியமிகழ்ச்சிசெய்யுநதீயோ
ரிப்பதியிலென்றுமெமைப்பூசிப்பார்க்கிடர்புரிவோர்யாவரேனுந்
தப்பிலாதவனிதனிற்புலையராய்ப்பிறந்துழலத்தகுவாரன்றே. ௩௬

விரிவாகமுத்தொழிலும்புரிந்துநாமினிதிருக்கும்விமலத்தானம்
பரிவாகக்காண்பார்கள்பணிவார்கண்மகிமையினைப்பகர்தற்பாற்றோ

வுரியாராயெத்தலத்திலுறைவருந்துயிலெழுகாலெர்நுகாலேனுந்
திரிகூடங்குற்றாலமெனநாவிலுரைத்தெழுவார்சிவமேசேர்வார். ௯௭

இன்னணமித்தலமகிமையாதலாற்கயிலைவிடுத்தெந்தநாளு
நன்னகர்ச்சின்மயப்பொதுவினண்ணுதும்யாமெனப்பரமர்நவின்றாரகப்
பன்னகசாயியுமயனும்பணியரசுங்குறுமுனியும்பணிவிட்டேகார்
பொன்னகரின்முரசொலியுஞ்சுரர்கணமுநதிருநட்டம்பொலிவாமென்றும். ௯௮

ஆதியாம்பலையலதுநன்னகாச்சிற்பொதுநடனமாருங்காணார்
காதலாற்சுரர்முனிவர்பலகாலநதவம்புரிநதுகண்டவாற்ற
போதினன்முகன்மூலப்பலைபரமனியநதிரங்கள்பொறித்தானன்றே
வாதராயணனமுதலோர்சித்திரமன்றெனுநாமம்வழங்கினாரால. ௯௯

வேதநாத்தமிழ்முனிக்குத்திரிகூடக்கிரிமுதலாவெள்ளிவெறபின்
பூதநாயகருலாத்தலைககளெடுநதிருநடமும்புகன்றேமென று
சூதன்மாதவர்க்குரைப்பக்கண்டகசேதனன்சரிதைசுருதவாக்கா
ஞதர்வாசுகிக்குரைத்தகதைவிரித்துநவிலுகெனநவில்வதானுன. ௧௦௰

௯-வது திருநடச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௫௱௯௰௭.

---

## ௰-வது கண்டகசேதனச்சருக்கம்

கந்தநறுங்குழல்போலுங்கமழ்சோலைகாசினிமான்
வநதனஞ்செய்மருங்கேய்க்கும்வல்லிசாதங்களெல்லாம்
பைந்தனமேநிகராகப்பணைத்தோங்கிக்காரகிலுஞ்
சந்தனமுங்குங்குமமுந்தண்பொதியுந்தெனபொதியம். ௧

நிலையமுதம்வாளுடுசேர்ந்ததெனச்செநதமிழ்த்தேன்
வரைநெடியகுடுமியினல்வான்கிழிப்பவதனவழியே
தரையின்மிசைப்போநததெனச்சாய்ந்தருவிபொன்கொழித்துக்
கரைகிழிப்பப்பொருதகடற்கண்பொருந்துநதல்பொருநதம். ௨

கரகமாமுனிகரத்துக்கமண்டலோதகமாகிப்
பரமர்வாழ்முக்களவிற்பாவவிருசம்புரிந்து
முரகரிகையேந்திரற்குமுத்திதருநதடநதாவி
விரகெறிந்தசித்தனுக்காய்மெய்சாய்நதார்பதிசூழ்நது ௩

விஞ்சுதசரதராமன்பூசனைசெய்மெய்த்தலமு
மஞ்சுதவழ்சிவசயிலம்வளர்வன்னியீச்சுரமுஞ்
செஞ்சவாலீச்சுரமுஞ்சேர்கடனையொருபாங்காய்ப்
பஞ்சலிங்கம்பொலிந்தோங்கும்பச்சாறுமொருபாங்காய். ௪

சிவகயிலாயப்பெருமான்செங்கணன்பதிபிறவுஞ்
சுவகயிலாயங்குளிக்குாதுறையாகிக்கறையாழி

யுவனைகயினூர்திருப்பதிகளொன்பதினுநம்பருறை
நவகயிலாயங்களினுநடைபெறுநதாம்பிரபன்னி. ௫

வேறு.

பொருனைமாநதிப்பூம்பாவைவலம்புரிக்குழிசிபூசி
யுருமணியரிசிவாரியுலைப்பெய்துதுவர்த்தீமூட்டிக்
கனாகெழுசிறுசோறாக்கிக்கனைதிகாப்பாவைகூட்டித்
திரண்மணற்சிற்றிலாடுஞ்சிந்துபூந்துறையின்பாங்கர். ௬

நிச்சநீர்ப்பொருனையாறுநெடியபாற்கடலாவெற்பு
நச்சரவணையாச்சென்னிநனிவைத்துக்கடற்சானீட்டிப்
பச்சைமால்கிடந்தாலன்னபசியதண்பழனச்சாலி
யிச்சைசேர்கமலச்செல்வியிருக்கையாந்திருநெல்வேலி. ௭

கிற்றொளிமதிபோனெற்றிக்கெவுரிகூறலதுமற்றைக்
கூற்றொளிகவர்நதாலெனனக்குலவுபச்சுருவாய்மேனி
நீற்றொளிதனைப்போல்வெணிங்லவொளிதனைப்போற்கங்கை
யாற்றொளிதனைப்போன்முத்தினழகுவேய்நிழலில்வாழ்வோன். ௮

பரசமையங்களென்னும்பகைதடிந்துலகிற்சைவத்
திரசமையத்தைநாட்டுஞ்செயவிடைக்கொடிநின்றாட
முரசுகண்டுயிலாவாயின்முகிலினநதுயில்பொற்கோயி
லரசுசெய்முக்கட்பெம்மானுறுங்கீழ்வேம்பநாட்டில். ௯

இஞ்சிசூழ்காலிவாடீச்சுரத்துநேர்குடபாலாகச்
செஞ்சியர்தஞ்சைநாடர்செழுந்தமிழ்வழுதிநாடர்
வஞ்சியரீழநாடரெனவரும்வணிகமாக்க
ளஞ்சுதேயத்துளார்க்குமாவணப்பொதுவோர்மூதூர். ௰

நீதிசேர்பதியில்வாழுநிறைந்தநால்வருணத்தாரி
லோதலானினங்கள்காத்தலுழவுவாணிபமேவேட்ட
லீதலேயாதியாறுமியற்றுசீர்வசியர்தம்மிற்
காதல்வாணிபங்கள்செய்யுங்கவிப்பர்தங்குலத்துவந்தோன். ௧௧

ஈட்டுதல்பகுத்தல்யாவுமிறுவதிற்சிறிதஞ்சாமை
காட்டியதனிமையாற்றல்காலத்தோடொழுகல்கோப
மோட்டுதலிடரிற்றேறலுறுவதுதெரிதலென்னும்
வாட்டமில்குணங்களெட்டுமருவுமாத்ததன்மைநதன். ௧௨

நகரமேற்பொருள்கள்யாவுநாட்டின்மேற்பொருள்கள்யாவுஞ்
சிகரமேற்பொருள்கள்யாவுநிலமேற்பொருள்கள்யாவு
மகரநீர்ப்பொருள்கள்யாவுமலிதலால்வணிகமாக்கள்
பகர்கருகூலம்போலும்பாதவன்பண்டசாலை. ௧௩

வேறு.

துகிரும்பொன்னுங்கருப்புரநூளமு
மகிலுஞ்சாந்தும்வயிரமுமாரமு
முகிலு ஞசூழ்மனைமுன்றிலினமாதரார்
நகிலுமொஞசுநடம்புரிதோளினன். ௧௪

ஈறிலாநிதியெய்தினனாயினும்
வீறிநாளும்பொருள்கவர்வேட்கையான்
சீறியாருமிகழச்சிறுவிலை
கூறிநாடொறும்விற்குங்கொடுமையான். ௧௫

கண்டமாற்றிக்கருப்புரஞ்சந்தனத்
தண்டமாற்றித்தண்டேன்கலப்பாற்றியுங்
கொண்டமாற்றுகநான்மடிகூறியும
பண்டமாற்றிபபடைக்கும்பொருணமையான். ௧௬

பேய்பசிக்குப்பெருவிருந்தாமுட
னோயபசிக்குறநுங்குவதோர்கிலன்
சேய்பசிக்கவுஞசெலவிருநதேங்கவுந
தாய்பசிக்கவுமுண்ணுநதறுகணன. ௧௭

மூவர்ககாகிலுமுன்னவர்க்காகிலுந
தேவர்க்காகிலுஞசென்னிவணங்கலான்
கோவர்ககாகக்கொடிறுடைப்பார்க்கல்லால்
யாவர்க்காகிலுமீரங்கைவிதிர்க்கலான. ௧௮

தாபமுன்னித்தனம்பலதேடவெத்
தீபமெங்குஞ்சிலசரக்கேறறுவான
யூபமனனவுடற்கலமீதினும்
பாபமன்னபலசரக்கேறறினன். ௧௯

விண்டகாணியிற்கோடிவிளைக்கினுங்
கொண்டகோடியிறகாணிகொடுக்கலான்
மண்டவான்பொருண்மண்ணிடைதாக்கவே
கண்டசேதனனகண்டகசேதனன். ௨௰

வேறு.

நாற்றிசைப்பண்டமூன்றுதிசையினுநடாத்தித்தானோர்
மேற்றிசைக்கொடுபோய்விற்பானவிடைமிசைத்திரளாக்கொண்டு
சேற்றிசைப்பழனஞ்சூழ்ந்தசித்திரநதியாங்கங்கை
யாற்றிசைக்கீழ்பாற்சென்றானருக்கனுமேல்பாற்சென்றான். ௨௧

ஆக்கியபொருளுக்கேற்பவைப்பசிவிழுவென்றுங்கே
வாக்கியம்விதிபபான்போலமறுதினத்துதித்தான்வெய்யோ

னூக்கினும்வறியோர்கூழுக்குப்பரிதார்குஞ்செல்வர்
பூக்கியக்கலத்தில்வீழும்பாலபழம்பஞ்சதாரை. ௨௨

வற்களாத்தென்பாலாருங்கங்கையில்வடபாலாருங்
கற்களாமலைநாட்டாருங்கடற்களாச்சேதுவாரு
மற்களாயுதையகாலத்தறமெனுங்கரும்பிற்சேர்தத
சற்களைவட்டாங்தெய்வச்சண்பகாரணியஞ்சேர்ந்தார். ௨௩

அந்தணர்கவிப்பர்செங்கோலரசர்வேளாளரன்பால்
வந்தவருயர்ந்தோர்தாழ்ந்தோர்மற்றைமானிடரேயன்றி
முந்தையானுலகத்தாருமொய்த்தனர்திரிகூடத்துச்
சிந்துநாண்மழைநாள்வாரிதிசைதொறும்பரந்தாலென்ன. ௨௪

சிவமதுகங்கைத்தானஞ்சேர்ந்தனர்வானோர்சித்தர்
மவுனர்செண்பகத்தடாகம்வதிந்தனர்புவியின்மாந்தர்
தவவடவருவித்தானஞ்சார்ந்தனரதனலவ்வூர்
புவனமந்தரமுமேலாஞ்சுவர்க்கமும்பொருவிற்றன்றே. ௨௫

சிந்துநீர்த்தரங்கந்தோய்வார்திரைக்கடன்முருநதனேர்வா
ருந்திநீர்ச்சுழிபோய்மீள்வாருந்தியிலுதித்தோரொப்பா
ரிந்திரதனுவிற்சேர்வாரிமையவர்தலைவனய்ப்பார்
மந்தரத்தருவிதோய்வார்வாநதிதரித்தோன்போல்வார். ௨௬

நதிபலதுறைதோருடிநன்னெறிநியதியாற்றி
முதியவேதியர்க்குத்தூசுண்முழுமணிக்கடகம்பூமி
நிதிபசுவிளைவுகன்னிநித்திலம்புரவியானை
துதிபலதானஞ்செய்தார்சுவர்க்காதிபோகம்வேட்டார். ௨௭

எம்பிரானிமையச்செல்வியானைமாமுகன்வேற்கந்த
னம்புயக்கண்ணனாதிதேவராலயங்கள்பூசை
நம்பன்மெய்யடியார்பூசைநலம்பெறப்புரிந்தார்மன்னோ
வெம்புவிப்பிறவிவேண்டார்மேற்பதம்வேட்டாரெல்லாம். ௨௮

கொண்டனர்கொள்வோர்க்கெல்லாங்கொடுவிலைகூறிமாறிப்
பண்டமார்பொதியெலாம்பொற்பலபொதியாகச்செய்தான்
கண்டகசேதனப்பேர்க்கயவன்கோள்காணவஞ்சி
மண்டுறவொளித்தான்போலவளாதனின்மறைந்தான்வெய்யோன். ௨௯

அற்றைநாட்கங்குல்வில்லாவரும்பண்டமிருந்தவெல்லாம்
பிற்றைநாட்கொடுதாவிற்றுப்பிறர்க்கணுகியான்வைகி
மற்றைநாள்விடியாமுன்னம்வளம்பதிசேர்ந்தான்யார்க்கு
முற்றநாளுதவாச்செல்வமுவரிநீர்ப்பெருக்கம்போல்வான். ௩௰

சோடிநாட்டவஞ்செய்தார்க்குங்குறுகொணாச்சங்கவீதி
காடினுனல்லன்றெய்வநதிக்கரையிருந்துமங்கீ

ராடினானல்லன் றன்னூாணுகினன்பொருளேபின்னுந்
தேடினானிருந்தான்மன்றோதிரவியங்காத்தபேய்போல், ௩க.

வேறு,

நாட்கடொறுமுன்சுவைத்துநனிவாயிற்பற்குறுகத்
தாட்கடியநடைகுறுகித்தளர்ந்துபோயுடல்குறுக
வாட்கடியன்பாம்புடல்போலாயுகமுங்குறுகினன்
றோட்கடியதண்டேந்தித்தூதுவருங்குறுகினர். ௩௨.

தாளாண்மைத்தளம்படைத்தாய்தானமேகொடுத்தறியாய்
கோளாண்மைத்துடைப்பம்போற்குவித்தனையிங்கார்க்காகக்
கேளாண்மைத்தருமமில்லாக்கெடுமதியோய்வாவென்றார்
நாளாண்மைக்கொடுவாளாலுயிர்குறைக்குநமன்றூதர், ௩௩.

அந்தகன்றூதவரலைப்பவாவிசோர்ந்தலமருவான்
புந்திகொடிதறத்தேடும்பொருள்களையுமப்பொருள்கள்
வந்துதனதுயிர்க்குதவாவாதனையுந்தனக்குவந்த
நிந்தனையுங்குறித்தெண்ணிநினையாதெல்லாம்நினைவான். ௩௪

வேறு,

கொடிமையாப்பொருளைத்தேடிக்குவித்தனன்கவித்தகங்கைச்
சடிலநாயகர்க்கென்றாலுந்தநிமாமுகற்கென்றாலும்
வடிவுடையுமைக்கென்றாலும்வாகைவேலவர்க்கென்றாலு
நெடியமாதவற்கென்றாலுநிருப்பணிநிறைத்தேனல்லேன். ௩௫

நசையறுவேனிற்காலநடைசாலைதண்ணீர்ப்பந்தர்
திசைதொறும்வைத்தேனல்லேன்செருப்புநற்குடையுமேலோர்க்
கசைவறக்கொடுத்தேனல்லேனன்னசத்திரங்கள்கட்டி
மிசைபவர்க்கெல்லாமன்னம்வேண்டுமாறளித்தேனல்லேன். ௩௬

நந்தனவனங்கள்வைத்துநாதராலயங்கட்கெல்லாஞ்
செந்திருப்பள்ளித்தாமஞ்சேர்வுறச்செய்தேனல்லே
னந்தளிர்ப்பனசநெல்லியாமபிரநாளிகேரம்
பைந்துணர்பூகமாதிபலமரம்வைத்தேனல்லேன். ௩௭

வாழ்ந்தநாளடுத்தவீடுவாழ்வுறவாழ்ந்தேனல்லேன்
சூழ்ந்துளகிளையையூட்டிச்சுற்றமும்வளர்த்தேனல்லேன்
றாழ்ந்துளகுடும்பமேனுந்தாங்கினேனல்லேன்முன்னாள்
வீழ்ந்துளதருமமேனுமேலுறவளர்த்தேனல்லேன். ௩௮

ஓலத்தண்மழைக்கார்காலமொதுக்கிடங்கொடுத்தேனல்லேன்
காலத்திற்பொருளில்லார்க்குக்கன்னிகாதானஞ்செய்யே
ஞாலத்தையுண்டார்கோயில்விளக்கிட்டேனல்லேனூற்றிற்
பாலத்தைமுகித்தேனல்லேன்படித்துறைசெய்தேனல்லேன். ௩௯

தேசிகர்க்கீந்தேனல்லேன்சிவபிரானடியார்க்கேனும்
பூசுரர்தங்கட்கேனும்போசனங்கொடுத்தேனல்லேன்
பாசநோயொழிக்குந்தில்லைகுற்றாலம்பாவநாசங்
காசிசேதுவிற்செல்வார்க்குக்கைப்பொருள்கொடுத்தேனல்லேன் ௩௰

தூசிலார்தமக்குத்தூசுசொன்னமில்லார்க்குச்சொன்ன
மாசறப்பசித்தோர்க்கன்னமாசினுமளித்தேனல்லே
னூசியில்வாசிபார்த்தேதொருபிடியமுதென்றாலும்
பேசுமென்மனதுகூடிப்பிச்சையிட்டுண்டேனல்லேன் ௩௧

கட்டினேனல்லேனேனுங்கடவுளாலயங்கள்போற்றி
யொட்டியோர்வலம்வந்தில்லேனுண்ணுநீர்க்குளங்கள்கூவல்
வெட்டினேனல்லேன்பொல்லேன்வீண்பொருள்விளைத்தேனிப்பால்
முட்டினேன்குனிந்தென்செய்கேனமொழியாவெழும்பாதகத்தோ. ௩௨

நிலையிலாவுடலும்வாழ்வுநிச்சயமென்றேயெண்ணி
யலகிலாக்கொடுமைசெய்தேனவத்தைவந்தடுத்ததந்தோ
விலகவோர்தருமமென்னுமெய்த்துணையில்லாப்பாவி
பலபடச்செய்தபாவம்பலித்ததென்றயர்ந்துசோர்ந்தான். ௩௩

வேறு,

எங்கினன்கடுகளவுமியாதானுமலையளவும்
பாங்கினன்பொருள்வரப்பார்த்திருந்துபதைத்தாவி
நீங்கினனுயிர்க்குறுதிநீங்காததுணைகாணன்
றூங்கினன்பாவமெனுந்தாங்கரியபெரும்பாரம். ௩௪

மன்கிடக்கையூர்கிடப்பப்பேர்கிடப்பமனைநிறைந்த
பொன்கிடப்பத்தேடிவைத்தபொருள்கிடப்பமனைமாதர்
முன்கிடப்பவொருவருக்குமுதவாதமுடையுடலம்
பின்கிடப்பத்தனிபோனன்செய்தவினைபிடர்பிடிப்ப. ௩௫

வீக்கினர்பெரும்பாசம்வெருட்டினர்பொருபடையாற்
றாக்கினர்நெருப்பாற்றிற்றள்ளினர்மயிர்ப்பாலம்
போக்கினர்கொடியமுள்ளிற்புரட்டினர்முரட்டுடல்புண்
ணாக்கினர்கொடுந்தூதரந்தகன்முன்கொடுபோனர். ௩௬

காலபடரலைப்பதனைக்கண்டிரங்கிக்கையமைத்து
மேலசைத்தகொடும்பாசக்கட்டவிழ்த்துவியர்திருத்திக்
கோலநகையமுதளித்துக்குணநிறைசெங்கோற்கடவுள்
சூலமொடுபாசமொடுநின்றதூதுவர்க்குரைப்பான். ௩௭

பன்னாளும்பாவியிவன்பாவமேபுரிந்தாலுங்
கொன்றருமதிச்சடையார்குற்றாலத்தனிலேகி

முன்னாளிற்பெற்றிருந்தான்மூன்றுநாட்டலவாச
மென்னாளிற்புண்ணியமோவிமையவர்க்குங்கிடையாதால். ௪௮

அன்னகர்வைகியமூன்றுநாளிலொருநாட்பலனே
முன்னமியவன்செய்தபெரும்பாவமெல்லாமுடித்ததாற்
பின்னொருநாட்பலன்றான்பிரான்கயிலைதனிற்சேர்க்கு
மின்னமொருநாட்பலனுமிறைவன்மேற்கடனுமாம். ௪௯

என்றியமணியம்பியகாலெண்ணரியகணநாதர்
மன்றலுயர்விமானமொடுந்தோன்றினர்மலர்மாரி
நன்றிவானவர்பொழிந்தார்நமன்றூதரிசயித்தார்
சென்றவனுஞ்சிவபெருமான்கயிலைவரைதனிற்சேர்ந்தான். ௫௰

இந்தவகைத்தலவாசத்தியற்கையெனவுயர்சூத
னந்தணருக்குணர்த்திவடவருவியொருதினப்பலனுற்
றந்தைநரகினைப்புதல்வன்றவிர்த்தகதையவர்கேட்ப
முந்தைநாரணர்க்கரனுரைமொழிந்தபடிமொழிகுவான். ௫௧

௰-வது-கண்டகசேதனச்சருக்கமுற்றிற்று.

ஆகத்-திருவிருத்தம்—௯௱௪௮.

## ௰௧-வது கவுற்சனச்சருக்கம்.

கொண்டையுறுநீலவிழிகொண்டையுறுநீலக்
கெண்டையொடுபாணிபுகுகேணிசெறிசோலை
கண்டையலராடுகிளிகண்டையலர்சொல்வாய்
தொண்டைவளநாடுமுயர்தொண்டைவளநாடு ௧

நாஞ்சிலுழவர்க்கெதிர்நடந்துவெடிதாவி
மாஞ்சினைகிழித்துவரிவாளைவிரிபாளை
பூஞ்சினைதினைத்துமதுசோர்கொடிபோலுங்
காஞ்சிநகரத்திலழகாஞ்சிநகரத்தில். ௨

ஆரமுதைமுக்கணழியாநிதியைமாவின்
சீரமுதவைப்பையிருசெங்கைகொடணைத்து
பார்பொருமுலைக்குறிவளைக்குறியமைத்த
வோர்பரையறஞ்செயுநகர்க்கொருமருங்கில். ௩

வேறு,

ஆனகமொலிக்கும்வீதியணிகெழுநாட்டிலங்கோர்
தேனகன்சோலைமாலைச்செழித்தசெஞ்சாலிவேலிக்
கோனகரந்தணாளன்குறசர்கோத்திரத்தில்வந்தோன்
மானகஞ்சுகத்தான்வேதம்வடகலைபயின்றநாவான்

மரபுசேர்குற்சனென்னுமறைபவன்றனக்குப்பாப
திருவருமுச்சமேறச்சுபொல்லாநீசமெய்த
வுரகருங்காரிசேயுமுதித்திடவுதித்தான்மன்னோ
கரவடன்கவுற்சனென்பான்கரும்பினிலரும்புபோல்வாம் ௫

மடமெல்லாமொன்றாய்ப்பாலன்வடிவெடுத்தெனவேதோன்றிப்
புடவியிலொழுக்கமாதிபுண்ணியநெறிகள்யாவுங்
கிடைபடக்கிடந்துபாவங்கிளர்வுறத்தவழ்ந்துபொல்லா
நடலையுங்கொலையுஞ்சூதுநடைபெறநடைபெற்றானே. ௬

அழுதொறுஞ்சீவகோடியழுதிடவழுவானஞ்சொன்
மொழிதொறும்படிறுங்கோளுங்குறளையுமொழியாக்கற்றான்
பழிபுரிந்துயிர்கள்வீட்டும்பயிற்சியபயின்றான்மாரி
மழைவளர்விழல்போற்காமம்வளர்ந்திடவளர்ந்தான்மன்னோ. ௭

முப்புரிநூலுந்தாங்கிமுன்சிகைசுடர்போறப்பூண்டு
குப்பமாந்திரங்களெல்லாங்குமந்திரம்புகல்வதானுன்
விப்பிரரோதும்வேதக்கிடையெலலாங்கிடையாவிட்டான்
செப்புநூலசிறிதுங்கற்றான்சிறுபுல்கொலைசற்றாப்போல். ௮

குரவர்நூலுணர்த்துங்காலைதருமமார்குலநூல்விட்டுக்
கரவடம்பலிக்குங்காலங்கணித்துமேலறியவேண்டிப
பரவுசோதிடமேபன்னிப்பயின்றனனுதலாலே
புரவலன்போத்தாணிப்புரோகிதத்தலைமைபூண்டான். ௯

தேர்ச்சிபோற்பிறன்கோள்கூறித்திரவியந்திரளாயீட்டுஞ்
சார்ச்சியாரைசனறனைத்தனவயப்படுத்துத்தானுஞ்
சோர்ச்சிசேர்மடவார்சேரிதனுர்ததர்தம்வயத்தனானன்
கூர்ச்சிவாயரவம்வீழ்த்திக்கோம்பிவாய்வீழும்புட்போல். ௰

வளர்ந்தகாட்பிரமசாரியெனும்பெயர்மறுக்கவேண்டிக்
கிளர்ந்தபங்கயத்தினமீதிற்கிளருமாவடுவைகோ
பிளந்துவைத்தனையவுண்கட்பேதையோர்மறையோன்மாதை
யிளம்பிடிக்கயம்போற்பற்றிவிராகக்கதவிவாகஞ்செய்தான். ௧௧

வேட்டகமதுவேகாமவேட்டஞ்செய்கானமாக
நாட்டகமணஞ்செய்கோலநாடுவான்புகுதமாதர்
கூட்டமானகுலங்களாகக்குலைகிதவலையாத்தானோர்
காட்டகவேடனுகிப்படுப்பதோர்கலையுமானான ௧௨

மனுவுகாளுவாகாண்மானையஞ்சக்கிராகது
வினவுமட்டகைகணமேலவிதுபாதத்திருதியாய
புனிதகாட்டொண்ணூற்றுறம்புணர்மூலத்தடமேயன்றி
யினியகீர்த்தடமூகதோயானியன்றதென்புலதம்தாக்கியான். ௧௩

பிறந்தநாண்முன்னுவாநாட்பெருநிசிபகலீரந்தி
யறந்தரும்விரதநாட்களட்டமிதந்தைதாய
ரிறந்தநாளிருவராயவிறைவர்நாட்பதின்ஞன்காதி
சிறந்தபுண்ணியநாளெல்லாந்தேனஞர்புணர்ச்சிநீக்கான், கச

தையலார்புணர்ச்சிக்கேகுஞ்சந்தியேசந்தியாக
மொய்யமைவிலங்குபுள்ளின்முறைகளேமுறைகளாக
மையுறுண்ணிடையார்யாக்குலங்களேகுலங்களாக
வையமேலநியமமாகமதனமேயொழுக்கமானன். கரு

சந்திகண்மறந்துசாதித்தருமங்களொருவிவேதச்
சிந்தையுமொழிந்தகாயத்திரிமுதலயர்த்துமாத
ருந்தியந்தடத்துமூழ்கியுயர்மூலச்சாந்தம்பூசி
மந்திரமவர்பாலோதிவணங்குவன்மதனத்தெய்வம். கசு

காலையிற்புனலின்மூழ்கிக்கடன்கழித்தனனுமோம்பி
மேலையிற்கருமமுற்றிவிதிமுறைதருமம்பேணிச்
சாலையில்விருந்துபோற்றித்தன்கிளையூட்டியுண்டு
மாலையில்வளர்வார்க்கெல்லாங்களையெனவளர்ந்தான்மன்னோ. கஎ

வேந்தனைச்செங்கோல்செய்யும்விரகினைக்கரவான்மாற்றி
மாந்தர்மேற்கொடுங்கோல்செய்யமந்திரக்குடிலஞ்செய்யுங்
காந்தனைப்பிரியாமாதர்கற்பினைப்பிரித்துத்தனபாற
போந்தமாமறைச்சிறார்கரும்புன்மைபோதிப்பதானன். கஅ

பூவையர்செய்யும்பாவம்புருடர்மேற்புருடர்பாவங்
கோவின்மேற்சுமையாமாதுக்கொற்றவனபுரியும்பாவ
மேவுமேபுரோகிதன்பால்வீண்புரோகிதத்தால்வன்னேனா
மூவர்பாதகமுந்தாங்குமுழுச்சுமைதாங்கிப்பான்றுன. க௯

வேறு

மனத்திலொன்றவனுரைப்பதொன்றினைமறந்துமொன்றினைநடத்துவா
னினத்துமங்கையர்முறைத்திறம்பினனிழித்தவஞ்சியர்கலவிருன்
முனைக்கொடுஞ்சமர்மறக்குறும்புகண்முடித்துநின்றுயிர்வதைத்துளா
னினைத்துநம்பினர்தமக்குவஞ்சகநிகழ்ச்சிதங்கியவிகழ்ச்சியான். உ௰

வருத்துதம்பனவிதத்திறும்புலைமருத்திறும்பிறர்மனைக்குள்வாழ்
பருத்தகொங்கையர்மயக்கினனபகைபழிக்குநெஞ்சிடைபயப்படா
னருத்துதண்புனல்குளித்தறிந்திலனலத்தகங்களின்முழுக்குறன
முருக்கிலங்கிதழ்மதுக்களன்றியுமுதுக்குடங்களின்மதுக்கொள்வான் உக

அடுத்திடுங்குடிகெடுக்கும்வஞ்சகனருக்கியம்பலிகொடுத்தனு
னெடுத்ததனகுலமுறைநருமுன்சொலுமியற்கையொன்றினுநடப்பிலா
னடுச்சொலுஞ்சவைவழக்கழிந்திடநடத்துகின்றனையிடத்திலுன்
பிடிக்குட்டங்களசிவத்தலங்களைமிகுத்ததொண்டனையலைத்துளான். உஉ

வேறு.

கொலைபுரிபாவங்கோடி குருநநைசமுதலகோடி
புலைமதுநுகர்ந்தபாவம்பொய்களவனந்தங்கோடி
நிலையிலான்காமக்கொள்ளைநிகழ்த்திடில்விண்ணின்மீனை
யலைகடன்மணலையெண்ணியறியினுமறியொணாதால். ௨௩

தரும்பெரும்பாவமன்றித்தருமமேயறியான்வேட்ட
மருந்துபோன்மனையாடன்னைமணந்தநாட்கண்டானேனு
மருந்ததிக்கற்பின்மிக்காளரும்பெருந்தவத்தினாலே
பொருந்துகாற்றடிப்பத்தாழைபூத்தெனவயிறுவாய்த்து. ௨௪

ஓதமாருவர்நீர்வேலையொளிர்சங்கினுதரம்வாய்ப்ப
மேதகுகுலத்துத்தோனறும்விலையிலாமுத்தம்போலப்
பாதகன்றனக்கோர்சேயாய்ச்சுகுற்சனைப்பயந்தாள்வேறு
மாதவம்வேண்டுங்கொல்லோதாரமுங்குருவும்வாய்த்தால். ௨௫

மைந்தனைப்பயந்தாளென்றுமனக்கொளான்மனையாடன்னை
நிந்தனைபுரிவானன்றிநேர்படான்பரத்தைமாதர்
தொந்தனைத்துவட்சிநீங்கானசுவைதருகரும்பினமேலுஞ்
சிந்தனைபுரிவதுண்டோவேம்பினைத்தினனுங்கீடம். ௨௬

கற்புடைமாதர்தம்மைக்கண்ணினாற்பார்த்தபாவ
நற்பொருள்கவர்ந்தபாவம்பிறர்மனைநயந்தபாவம்
பற்பலகுடிக்குந்தீமைநாவினாற்பகர்ந்தபாவ
மிற்பிறழ்புரிந்தபாவமிவையெல்லாம்வளைந்துசுற்றி ௨௭

மாமனைக்குரிமையாட்டிமனங்கொதிகொதித்தவெல்லாந்
தீமையோனுடலாம்பஞ்சிற்செந்தழற்பொறியாய்ப்பற்றிக்
காமமேவினையாய்முற்றிநாளிலேகழிந்துமேனி
தேமுறாம்புழுவார்நாஞ்சிற்கொழுவெனத்தேய்ந்துமாய்ந்தான். ௨௮

ஆங்கவனிறந்தகாலையந்தநாட்டுள்ளமாந்தர்
நீங்கறுபாலின்மூழ்கித்தீவினைதீர்ந்தார்மாதர்
தாங்களுநாறுநெய்யாடிச்சருக்கலாவழங்கியார்த்தா
ரோங்கினவறங்கள்யாவுமுயர்ந்ததுதாழ்ந்தபூமி. ௨௯

அன்னவன்றன்னைக்காலனடுங்கொலைத்தூதர்தாக்கிப்
பின்னுறவலையால்வீசிப்பிடித்தனரிழுத்துத்தண்டான்
முன்னுறப்புடைத்துச்செங்கைமூட்டொடும்பொருந்தச்சேர்த்துப்
பன்னெடும்பாசம்வீக்கிப்பரட்டிடைக்குணிலாற்கொட்டி. ௩௰

நடந்தனவிருகால்சோரநலிந்தனர்நூறுகாதந்
துடர்ந்தனர்வெருவியோடத்துரந்தனர்நூறுகாதங்
கிடந்தனனுருண்டுவீழக்கிளர்முடிசெடிதொட்டீர்ப்ப
விடந்தொறும்புரியிட்டீர்த்தாரீரிருநூறுகாதம். ௩௧

ஈர்த்தன்வாயெறும்புமீயுந்துவைந்திடப்பரந்தாங்கள்
பார்த்தகண்குன்டந்துகாகம்பருந்தினங்குருதிமாந்த
வேர்த்துடலயர்ந்திட்சாரமெய்யெல்லாமினங்கள்சோர
வீர்த்தனர்கொணர்ந்துதூதரியமமாபுரத்திலுய்த்தார். ௩௨

வரைபொருபுயமும்பாரத்தண்டமும்வடவைபோல
நிரைதருசிகையுஞ்சிரிநெருப்பெழவிழித்தகண்ணும்
பொருசழற்காலும்வீரதந்தமும்பொலியச்செங்கோ
லரசவீற்றிருக்கைகண்டானச்சமுற்றயர்ந்துவீழ்ந்தான். ௩௩

விழுந்தவன்சிகைதொட்டீர்த்துவிடுத்தனர்தொழுதார்நிற்பத்
தொழும்பனைத்தருமராசனசுறக்கொளவெறித்துநோக்கி
யெழும்படர்க்கொடியோன்றன்னையெற்றுமினெறிமின்வாளா
லழுந்துறத்தடிமினென்னவசனியேறஞ்சவார்த்தான். ௩௪

சண்டனீதுலைப்பவோடித்தருக்கினர்கொண்டுபோந்தார்
கொண்டல்போனிறத்தர்பாரக்கூளிபோன்முகத்தார்தீப்போல்
விண்டெரிசிகையாரவிண்போல்வெடித்தெழுகுரலார்கோபக்
கண்டகருறக்கும்வாயார்கனற்பொறிபறக்குங்கண்ணார். ௩௫

கொட்டுகோல்கட்டுபாசங்குணில்பெருமுசலந்தண்டம்
வெட்டிவாளிழுக்குந்தோட்டிதெறிக்கும்வில்குறைக்குமீர்வாள்
கிட்டிமத்திகைவெஞ்சூலங்கழிபடைவெறியுங்குந்தங்
கட்டழல்நிருப்புப்பாவைகப்பணமழுக்களன்றி. ௩௬

ஆட்டியசெக்கும்பூட்டியலாக்குமெந்திரமுங்குத்தி
நாட்டியகழுவுநகவ்வுஞாளியுங்கடிக்கும்பாம்பும்
பூட்டியவடமுந்தூக்கும்விட்டமும்பொறியுந்தீயில்
வாட்டியகுறடுங்கோக்குந்தூண்டிலும்வலையுஞ்சூழ. ௩௭

உறுக்குவார்பதகர்தம்மையுடலிடைப்பாசம்வீக்கி
யிறுக்குவார்சினப்பாரவ்வாறெற்றுவாரெறிவார்செங்கை
முறுக்குவாரடிப்பார்தண்டாணமோதுவார்கந்துகந்தாய்
நெறுக்குவார்கொடுமையெல்லாநோக்குவான்புலம்பலுற்றான். ௩௮

இத்தனைகொடிதுகாலதண்டமென்றுணர்ந்தேனல்லேன்
கொத்தலர்குழலார்மோகக்குறும்பனென்குரவன்வாக்குஞ்
சித்தமென்றுணரேன்றீமைசெய்தனனெண்ணில்கோடி
யத்தனைபாவமல்லாலறஞ்செய்துமறியேனந்தோ. ௩௯

கழுவுக்கோமுறுக்கிவீசுங்கவணுக்கோதறிக்குங்கோர
மழுவுக்கோதுணிக்கும்வீரவாளுக்கோநரகவாய்தப்
புழுவுக்கோபடைகளோச்சிப்பொருக்கெனவளைத்தசூதர்
குழுவுக்கோவையகோவென்றுயிர்ப்பலிகொடுப்பேனென்றான். ௪௰

சிந்தைகலங்கியேயங்கித்திடுக்கிடக்கையுங்காலும்
புந்தியும்பதறக்கண்ணீர்பொழிதரப்புடைநின்றோரை
யுந்தினர்பதைப்பத்தாழாலுதைத்தனர்தடிகளோச்சி
முந்தினருறுக்கிமீசைமுறுக்கினொறுக்குநீரார். ௬௧

அந்தணர்குலததேவந்துமரும்பலிகொடுத்துண்ணுமற்
பொங்கெனப்பொசித்தானவாயிற்புழுக்களைவாரியிட்டார்
சந்திகள்குளியாண்மேனிதழலிடைக்குளிக்கச்செய்தார்
மந்திரமோதாவாய்க்குமட்டருப்புலப்பம்வைத்தார். ௬௨

குலமணமாதர்நெஞ்சங்கொதிகொதித்தயரவோடிப்
பலர்மனைதொறுஞ்சென்றனைப்பலமுலைக்கழுவில்வைத்தா
ருலகினிற்றந்தைதாயர்பசித்திடவுண்டவாயின்
மலமொடுபுழுவும்வாரிவயிறொலாநிரம்பவிட்டார். ௬௩

வரைநிகர்கற்புமாதர்வடிவினைநோக்குங்கண்ணி
னிரைநிரையாகவூசிசிறுத்தினர்பெரியோர்தம்மை
யுரையினாலிகழ்ந்தவாயிலுதைந்துபல்லுகுத்தார்பின்னுங்
குரைதருகுருதிசோரக்கொடிறுகள்கிழித்தார்மன்றே. ௬௪

பிறர்மனைக்கேகுங்காலைப்பிணித்தனர்துணித்துவீழ்த்தார்
மறுமனைக்கொடியைத்தீண்டுமண்ககரந்துமித்தார்மாதர்
முறைகெடத்தழுவுமெய்யைமுசலத்தால்வயிரத்தண்டா
லிறவிறவடித்துவீழ்த்தியென்பெலாநொறுக்கினாரால். ௬௫

வேறு.

எறிவளைக்கையெளியவன்பாரியை
முறிபடுத்திமுயங்கியமூடனைத்
தறிதறித்துத்தசைதசையாகவே
தெறிவில்லிட்டுத்தெறித்தனர்திக்கெலாம். ௬௬

மறுவில்காவலின்மாடத்துக்கன்னியை
வெறிமருந்திட்டுமேவியபாவியைக
குறிதுணித்துக்குருதியும்வாய்ப்பெய்து
கறியும்பானமும்போற்கலந்தூட்டினார். ௬௭

அத்திரத்தைப்பொருவிழியங்கலார்
நித்திலக்குட்கபடஞ்செய்நீசனைப்
பத்திரத்திற்பதைப்பவுறுப்பெலாஞ்
சித்திரத்துணியாக்கினைசெய்வித்தார். ௬௮

வருகைபார்த்தயன்மாதரைச்சோர்வுகண்
டிருகையோச்சித்தழீஇயவன்யாக்கையைச்
அரிகையாற்கண்டதுண்டங்களாக்கியே
இரிகையன்றியுஞ்செக்கிலிட்டாட்டினார். ௬௯

நம்பருக்கடியாரைநல்லோர்தமை
யம்பிருக்குங்கண்ணரைமற்றரையும்
வம்புரைத்தகொடியவன்வாயிடைச்
செம்புருக்கிச்சொரிந்தனர்தீயெழ. ௫௰

கண்டவூர்மனைத்தீயிட்டகள்வன்மெய்
துண்டமாக்கித்துகில்சுற்றிநெய்கலேய்
மண்டுகார்த்திகைவான்பனைத்தீபம்போற்
கொண்டன்மேனியெரியக்கொளுத்தினர். ௫௧

நடுக்குழப்பியநாவரிந்தார்சிலர்
வடுக்கள்பேசியவாய்கிழித்தார்சிலர்
கொடுத்துறைகுடர்துமித்தார்கொடை
தடுத்தகையைத்தறித்தெறிந்தார்சிலர். ௫௨

புண்டரும்பொறிப்போகத்தைப்பொய்யெனக்
கண்டிடாதகணிகையர்காமத்தின்
மிண்டனுகிவெறிமதலூனுட
னுண்டவாயிற்சிலமொரியூட்டினர். ௫௩

தாயுந்தந்தையும்போறபரதாரத்தை
யாயுமாறினறிச்சேர்ந்தானவாவறக்
காயும்வெங்கனற்பாவைகள்காட்டினர்
தோயுநதோறும்பொறியெனத்தள்ளினன். ௫௪

உறுப்புறுப்பெனவீர்ந்துமுடலெலா
மறுத்தறுத்துத்துணித்துமவலனை
மறுத்துமேனியிசைத்தும்வன்றூதுவர்
கறுத்துமோய்ந்தனர்கன்மங்களோய்ந்தில. ௫௫

கண்டஞ்செய்யுங்கருவிகடேய்ந்தன
தண்டகாலபடருஞ்சலித்தனர்
மிண்டனுவியைமீளவுய்த்தாரரோ
கொண்டநாலெழுகோடிநரகர்பால். ௫௬

மகுடவெற்றிமறலிதன்னேவலால்
விகடபத்திரன்வெம்பாசபாணியுந
தகளிலுக்கிரன்றன்முகனுதியா
முகமுமுட்டியனுதவர்முன்னினர். ௫௭

கோடிகோடிநிகாதக்கொடுமையு
மாடியோடித்தவிப்பவராவியுந்
தேடியோடித்தருமஞ்செயான்கண்டு
வாடியோடிமறுகலுற்றனரோ. ௫௮

கம்பிரேணுச்சதிதநுகல்வோர்களை
வம்பியற்றியடைக்கலம்வஞ்சித்தான்
பம்பியாவிபதைக்கப்பதைக்கவே
கும்பிபாகத்திற்குப்புறத்தள்ளினா. ௬௰

சிவத்தலந்திருமாலவளராலயந்
தவத்தர்வாழ்மடம்புண்ணியசாலைக
ளவத்தமாகவலைத்தவனாவியைக்
கவற்றுபாழ்நரகத்திடைவீழ்த்தினார்.

தேவதாயங்களவேதியர்செய்கண்மேற்
கோலினாவிறைகூட்டிக்கொடுமைசெய்
பாவியாவிபதைபடக்குத்தியே
யேவினாரெரிவாய்நரகத்திடை. ௬௧

அச்சிவாலயமாவபடித்துறை
மச்சவாவிகள்சாரமலம்விடு
துச்சனாவிதுடிக்கத்துடிக்கவே
மிச்சில்வாய்நரகத்திடைவீழ்த்தினார். ௬௨

ஆளும்வேந்தர்க்கநீதிகளோதியு
மீளமீளக்குடிக்கிறைமேல்வைத்தாங்
கோளுரைத்துக்குறும்புசெய்கோளனைக்
காளகூடநரகிறகவிழ்த்தனர். ௬௩

கூடினாறுகுளிதாபபேசியே
கூடகத்தொழில்செய்யுங்கொடியனைக்
கூடசன்மலிக்கும்பியிற்றள்ளியே
கூடமத்திகைகொண்டறைந்தாரரோ. ௬௪

முழுக்குஞ்சந்தயுமோனமுமந்தணை
ரொழுக்கமூதவிர்த்தூணுண்டுடன்மெய்
புழுக்கள்சோர்தரப்புள்ளினங்குத்தவே
நழுக்குகோரநரகிலழுத்தினார். ௬௫

வீழும்புள்ளுரும்விலங்குங்கொலைசெய்து
வாழுங்கானமரங்குறைத்தானறனை
யாழுங்கும்பியசிபத்திரமெனும்
போழும்பூழிநரகிடைப்போக்கினார். ௬௬

வேறு.

விரகினாற்பிறர்பொருள்வலிதினிலெஃகிய
கரவடக்கவடனைக்காலனூத்திர

நரகிடைவீழ்ந்திருர்நன்றிகொன்றதா
லிருளெனுநரகிடையெறிந்திட்டாரரோ. ௬௭

வேறு.

மட்டுருத்தண்டக்தோறுமாமுனைக்கழுக்கடோறு
நட்டனுவருமோய்ந்தார்நரகமுஞ்சலித்ததன்றிச்
சட்டமார்நமனுங்கூற்றுஞ்சலித்தனர்கவுற்சனென்பான்
பட்டபாடெனிதோவம்மாபாவமுஞ்சலித்ததன்றே. ௬௮

நங்கினவரிகழுங்காலையிலுன்பெறுசுகுற்சனென்பான்
பாங்குறுமன்னைசீரார்ட்ழமறைக்குழாத்திறசார்ந்து
தேன்குநீர்ப்பழனஞ்சூழ்திருநகர்க்காஞ்சிநண்ணி
யாங்குலவொழுக்கம்பூண்டானலரியினரும்புபோல. ௬௯

மாணமாமறைகளோதிமறைச்சிருர்கணத்துநூல்கண்
ஞானமார்சுகுற்சனென்பானவில்கினறநாளிலவ்வூர்த்
தானமாமறுகுதோறுஞ்சவைதொறுந்தாதைசெய்த
வீனமாம்பழிபாவங்களிருசெவியுளையக்கேட்டான், ௭௰

கோதிலாமறையோனுகிக்குற்சர்கோத்திரத்தில்வந்தும்
பாதகம்புரிந்தானந்தோபாற்கடல்விடம்போற்றேன்றித்
தாதைமுன்புரிந்தபொல்லாத்தவறெலாங்கேட்கிலென்றன்
காதையும்வெதும்பச்சுட்டுக்கருத்தையுங்கருக்குமாதோ. ௭௧

பகருரும்பாவஞ்செய்தானபவர்க்கம்வீழ்படைமாற்றச்
சகரைமீட்டசெய்போற்றலஞ்செயவல்லேனல்லேன்
மகவெனவவன்பாற்றேன்றும்வன்பழிகழுவவீதே
திகழுறுநெறியென்றுன்னித்தீர்த்தயாத்திரைமேற்சென்றான். ௭௨

குளிப்பவர்பாவஞ்சிக்குங்குரைதிரைவாரணாசி
தெளிக்குநீர்ச்சோணைவாணிசிந்துநன்மதைகாளிந்தி
விளித்தெறிதரங்கக்கோதாவிரியுங்காவிரியுமாடி
யளிப்புனற்சேதுவைகையரும்பெறற்பொருனைமூழ்கி. ௭௩

தவமதுகங்கையெய்திச்சராசரமானவானோர்
புவமதுகங்கைநீத்தபடிமையுமாகத்திங்க
ணவமதுகங்கையாதிநதிகள்சேர்கதியுநோக்கிச்
சிவமதுகங்கைபொங்குந்திரிகூடச்சாரல்சார்ந்தான். ௭௪

தருமமேமுதலாநான்குந்தரணியில்வேட்டோர்யாரும்
வருகெனத்திரைக்கைகாட்டிவந்தவர்பவங்களோடப்
பொருசிலையம்பூட்டிபுண்ணியத்திரிகூடத்தி
னருளொருவடிவாய்த்தோன்றுமருவிகண்குளிரக்கண்டான். ௭௫

வேறு,

நாடினான்வடவருவிநண்ணினானிமகிரிமையந்துபாடி
யாடினான்கங்குளிர்ந்தானஞ்சலித்தான்விஞ்சுதவமனந்தங்கோடி
சேடினான்மதுமலர்கள்சிந்தினான்கரமலர்கள்சென்னிமீதிற்
சூடினான்றிரிகூடச்சிவக்கொழுந்தைத்தொழுதாடித்துள்ளினானால், ௭௬

தங்கமறைபலவோதியங்கமுறைபயில்கேள்விச்சுகுற்சனெனபா
னங்கமர்ந்துவடவருவித்துறையாடிவருநாளிலவனையீன்றோன்
பங்கமுறநரகினிடைப்படுந்துயருமவனையிடர்ப்படுத்துந்தா
தங்கள்பெருஞ்சலிப்புமெதிர்காண்டோறும்யாழ்முனியனசலித்துநோக்கி. ௭௭

மானமார்புலனொடுக்கிக்கண்முகிழ்த்துயோகிருந்துமனதுக்கெட்டா
ஞானமார்விழிதிறந்துபார்த்திடுமவனூழ்ந்துநரகவாதை
யானமாபிரமகற்பந்தொலைந்தாலுந்தொலையாதாலதுவானாலு
மீனமார்மறையவனோர்மகவீன்றானவமணியீன்றதேபோல. ௭௮

சிவநாமம்புகழ்ந்தமரர்திரண்டாடுந்திரிகூடஞ்சென்றுசேர்ந்து
புவனுநிசளிலுபர்ந்தபுடார்ச்சுனமாபுரமேவிப்புனிதரோடு
நவநாதசித்தரொடும்பத்தரொடுஞ்சித்திரமாநதிதோய்கின்று
னவனாலேபிவன்பாவமகலுமெனத்தெருள்கூர்ந்தானருளான்மிக்கான். ௭௯

பெரியபிரான்றிரிகூடமிவனாலேயாமுமெபதப்பெறுவோமென்று
புரிசடிலம்புறத்தசையமகதியாழ்ப்பிடித்தமுனிபோதலோடுங்
குருநிலைமைக்குற்சர்பெருங்குலதீபங்கண்டுமனங்குழைந்துதாழ்ந்து
பரிவினுடனருக்கியபாத்தியங்கொடுத்துமலாதுவிப்பணிந்தான்மன்னோ. ௮௰

எம்பிரானெழுந்தருளிவந்தவாறென்னையெனவியம்பமேல்லை
நம்பிநீயினிஇருப்பவுந்தைநரகிடைகிடக்கைநன்றோவென்று
தம்புருவினெதிர்பாடிச்சுருதியாழ்முனியுரைப்பச்சுகுற்சன்போற்றி
வெம்புபெருந்தாதைதுயர்தீர்க்குமாறருளுகெனவிளம்பமேலோன். ௮௧

யாகமாமறைபுதல்வாநரகம்விடுத்துந்தைகரையேறவேண்டிற்
பாகமாம்வடவருவிபடிந்தவோராண்டிவிருபாகந்தன்னில
யோகமாமுத்தராயனத்தின்மதியாதிலுயர்ந்தமாசி
மாகமாடியபலனிற்பன்னிரண்டாந்திதிப்பலனைவழங்காயென்றான். ௮௨

என்னநாரதனுரைப்பச்சுகுற்சனெனும்பாலனெழுந்திதையங்கூர்ந்து
நன்னகர்சித்திரநதிதோயோராண்டிவிரயனடைபயில்வாரோர்
மன்னுமுத்தராயனத்தின்மதியாதினமாகமாமதியின்முன்னும்
பன்னிரண்டாந்திதிப்பலனைச்சனகனுக்கென்றுதகமுடன்பரிவாலீந்தான் ௮௩

வேறு.

சுமுகவேதியன்சித்திரநதியிலோர்தினப்பலன்சொரிதாரை
சமயாநுகக்குறும்பெறிபுண்ணியதாரையோவவன்றூதை

பூதின்பொன்னரியாசனத்துறைநமன்புண்ணியவுருநோக்கிக்
காவலனறனக்கிதுகொலோவடிவெனக்கண்களிப்புறநின்றான்.

பாவர்சங்கமும்பாவர்வேடமுங்கொடுபாவர்தண்டனஞ்செய்வா
றேவர்சங்கமுந்தேவர்வேடமுங்கொடுசெம்மையோர்க்கருள்செய்வான்
யாவர்பணியினுநடுநெறியியற்றலாற்றருமனெனறிவருமா
மாவதென்றனர்துதுவர்துதிசெயவதிசயித்தெதிர்சென்றான். ௬௪

கண்டுபோற்றலுநமன்முகமலர்ந்துளங்களிநதுநின்மகவாலே
தண்டநீங்கினைசித்திரநதிப்பலன்றருகையாலெனுமேல்லை
யண்டராத்தனர்துநதுமியார்த்தனவார்த்தனமலர்மாரி
கொண்டுபொன்மணிமானமேலேறினர்குருசர்கோத்திரத்தானே. ௬௫

வேறு.

புகப்பெற்றநரகமெல்லாங்களைவிடுபத்தெனபுலத்தார்புகழநீங்கி
யிகப்புற்றான்மறலியும்பின்சென்றுவழிவிடப்பெற்றானிறுமாப்பெய்தி
யுகப்புற்றான்றிரிகூடமெதிர்தொழப்பெற்றானமறையோனுணர்வானமிக்க
மகப்பெற்றார்பெறும்பேறுமற்றொருவர்பெறுவாரோவையமீதில். ௬௬

அண்டரொடுவானமிசைமானமிசைவருவானையவனசீரமைந்தன்
கண்டுநாரதரபரவிதனெதிசையிலுதிக்குமொருகதிரோனெனன
வொண்டொடிக்கற்புடையவள்வாயுனைப்பெற்றாள்றனக்குநீயுவப்பாலீந்த
மண்டுபுனற்சித்திரமாநதிப்பலனினமகிமையதோவருவதென்றான். ௬௭

அந்தமொழிநிகழாமுனந்தரவிமானமிழிந்ததந்தருளான்
வந்துமுனிதாள்பணிந்தானமைந்தனெழீஇத்தந்தையடிவணங்கிவீழ்ந்தான
சந்தையையெடுத்தனைத்துவலந்தடிபபமெலிந்தபுயந்தடிபபமேலும்
புந்தியெல்லாங்களிகூரவுச்சிமோந்துடலமெல்லாம்புளகம்போர்த்தான. ௬௮

துன்றுதுயாநெடுங்காலமியம்புரத்துழந்தவெல்லாஞ்சொல்லியாங்கு
நின்றுகளையேறறியதுநதருமனுபசரித்ததுவுநிகழ்த்தியேகி
யனறுரிமைப்பாலனொடுசென்றருவிபடிந்துகடனனைத்துமூறறி
மன்றுளார்திரிகூடதிருக்கோயில்வலமாகவணங்கப்போந்தான். ௬௯

தொந்தனைசேர்நரகவாதனையொழித்துத்தலையாதசுவர்க்கபோகந
தந்தனையேவடவருவிபடிந்தபலனறந்தெனச்சீர்தழைப்பவாழ்த்தி
மைந்தனைவாழ்கெனவிருவியாழ்முனிவனறனைப்பரவிமானமேற்கொண்
டந்தரபல்லியங்கறங்கவருமறையோன்சுறபகநாடணைந்தான்மனனே. ௭௰

பெட்பகந்தன்வயமாகுமொருமைநாரதனுரைப்பப்பெருமைபேணிக்
கொட்பகந்தநியாயமெல்லாமகன்றதைதனக்கொழித்தகொள்கைகூறித்
தட்பகந்தமலர்ச்சோலைத்திரிகூடந்தொழநோக்கிததாழ்ந்துவாழ்ந்த
புட்கந்தன்சீர்க்கட்பயரிக்கரணபேரனமுனிக்கணத்துப்புகல்வான்சூதன். ௭௧

ய௧-வது-கவுற்சனச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௭௱௭௰௧

## ௨௰௨-வது புட்பகந்தச்சருக்கம்.

ஆடகமாடவீதியணிகள்போணிகளாக்
கோட்டணைமுரசமார்ப்பக்கொடிகொடிப்படையாக்கோலி
நீடல்வானரசைத்தனபானிருபனோவென்றுவென்று
வீடமர்பொன்னிறுட்டைவென்றதுகனனிநாடு ௧

மாகமார்மாடகூடம்வளைத்திரள்சேணமான
மேகமார்கொடிகளீட்டம்விசைத்தெழுசிறகராக
நாகமார்படங்குநாட்டிஞாயிலாஞ்சிகரிவந்தன
பாகசாதனன்மேலீட்டும்பாசறைபோலுமூதூர். ௨

பொற்கையார்புலிமானேந்திப்பொருகையார்குருகையார்க்கும்
விற்கையார்புறகையாராய்விடவடமீனமேந்தி
நிற்கையார்நடத்துஞ்செங்கோனிருபன்வாழ்போத்தாணிக்
கொற்கைவாழ்நாதனுளன்குசலனெனவொருவனமாதோ. ௩

ஆறங்கமைநாலுவேள்வியொழுக்கநான்கனன்மூன்றோம்பி
அறங்குமிருமைபூண்டுறவலகருத்தொருமையாய்ந்த
பேறங்கிகுலநதோரோடும்பிறங்குநூல்பயில்வதாலு
ஊறங்கமரிபாலூட்டநாகமுங்குதட்டும்மாபோல். ௪

உயர்தருமறைநூலோதியோங்குசீர்ப்பிரமஞ்சைவம்
வயிணவங்காந்தமாதிவகைபலபுராணம்பனனி
யயநுகர்குளகுபோலவைத்திரிமனுவாசிட்டப்
பெயர்தருசிலநூல்கற்றுச்சமயநூல்பிகற்றுநின்றான். ௫

வேறு.

மாவிரதம்பாசுபதம்வருகாளாமுகஞ்சைவ
மோவில்வயிரவம்வாமமெனவாறுமுட்சமைய
மேவுநூல்பயின்றேயுமெய்யொழுக்கநெறியஞ்சித்
தாவுபரமதம்பூண்டான்வைதிகமுந்தழுவானால். ௬

புறச்சமயநூல்பொருந்திப்பொருந்தாவைசேடிகமும்
பறத்துமீமாங்கிசமுமபவுத்தமாருகமதமு
மறத்தலோகாயுதமும்வளாயநையாயிகமும்
பிறர்க்கெல்லாம்வகைதெரியப்பேசுதற்குங்குருவானான். ௭

வேறு.

நூல்பலபயின்றோனானுநவலுறுபொருளைத்தேரான்
மேலுறுசமையநோக்கானமெய்ப்பொருளிதுவென்றோரா
னல்வகைப்பண்டஞ்சேர்ந்தகனிகருகூலம்புக்கும்
பாலினைகரும்புவீழ்த்துவேம்புகொள்பாலன்போன்றான். ௮

ஓதியுமுணர்ந்துமேனோர்க்குரைத்துமுணர்கலாத
பேதையுட்பேதையாகிமறைக்குலப்பெருமைதீர்ந்தா
னீதிநூலுணர்ந்தோரோதுநெறியினுமில்லாதுதி
வேதவாக்கியங்கள்சொல்லுமெய்யெலலாம்பொய்யென்பானால் ௯

பூதலமன்றிவேறோர்புவனமுமில்லைப்பூமேல்
யாதுமங்குதிக்குஞ்செய்கையியற்கையேயன்றிப்போனில்லைத்
தீதறநிற்றலுமியற்கையேதிருமாலில்லைச
சாதலுமிதுவேயனறிச்சம்புவுமில்லையென்றான். ௰

இங்கிவன்கிழக்குமேவருமெனக்குமேறகாதலாலே
யங்கமர்திசைவேறில்லையத்திசைத்தேவுமில்லைத்
தங்குமுன்வினையுமில்லைத்தோற்றிடுஞ்செயல்களிங்கே
பங்கமாய்க்கழிதலாலேபாவபுண்ணியமுமில்லை. ௰௧

சுறந்தபான்முலைபுகாதுகழிகனிமரம்புகாதா
லிறந்தவர்பிறப்பதில்லையிறந்தவருயிர்கள்கீழ்மேற்
பறந்திடக்கண்பதில்லைபவர்க்கமுமதனுலில்லைச்
சிறந்ததோர்சுவர்க்கமில்லைதெய்வமுமில்லையென்பான். ௰௨

அந்தணர்முதலோர்நால்வரவர்களிற்றாழ்ந்தாரென்ன
வந்தபல்குலம்வேறில்லைவவுவேறிலதாலாந்த
தந்தமக்கிசைந்தபோகந்தாமநுபவித்தன்முத்தி
நந்துறத்துறவுபூண்டுநலிவதுநரகமென்பான். ௰௩

அறநெறியுடனுக்கேற்பவுண்டுடுத்தநுபவித்தன்
மறநெறிபசியாலாகம்வருந்திநோன்பிருத்தலென்று
திறநெறிபோலக்கூறிச்செந்நெறிததலைநின்றாப
புறநெறியந்தகாரம்புகுந்ததுதல்கருமமானன். ௰௪

பெருங்குலமறையோர்தம்மைப்பெருமைசேர்தருமநீதி
யருங்கலைப்பயிற்சிதாறறியனங்கநூலபயிலச்செய்தும்
பரந்துநீர்காலைமாலைபடிந்துநீறணிவார்தம்மைத்
திருந்துளவெண்ணீறாடிச்செஞ்சாந்துபூனயச்செய்தும். ௰௫

ஓமமேற்சொரியுநெய்யையுண்டிமேற்சொரியப்பண்ணி
யாமளவருந்தச்செய்துமாடவர்மடவார்க்கெனறுங்
காமமேவினையாமூட்டிக்கன்மமுநெறியுநீக்கித்
தாமவேதியரையெல்லாந்தான்விழும்படுகர்வீழ்த்தான். ௰௬

அங்கணர்செங்கணார்தம்மாலையந்தேவர்கோட்ட
மெங்கணும்பரவச்செய்வார்க்கெதிரெதிர்தடையாய்ச்செல்வான்
கங்கைகோதமிகாளிந்திகன்னிதன்பொருனையாடத்
தங்களின்விரும்பிச்செல்வார்தம்மெதிர்தம்மாநிற்பான். ௰௭

எந்தையார்திருக்குற்றாலமிறைஞ்சுவானேகுவோரை
யுந்திகள்சந்திதோறுமரும்பெருந்தினங்கடோறுஞ்
சந்திகணியமர்தோறுந்தடுப்பதுரியமமானான்
புந்திமேலறிவாம்பாலைப்புலனெனுங்கமரில்வீழ்த்தோன். ௰௮

பாவனைசெயலிரண்டிற்பத்தியாறபயத்தான்மற்று
மேவரும்விளையாட்டாலுமேலவர்கீழோரேனுந்
தேவர்கோன்றிரிகூடத்தைத்திசைநோக்கிப்புகழ்ந்துபோற்றில்
யாவருமுத்திசேர்வரென்றுநூலுணர்ந்துமோரான், ௰௯

புக்குளநகரத்தாரைவிலக்குறல்புரிவானன்றி
மிக்குளபுறநாட்டுள்ளார்விண்ணுளார்மண்ணிலுள்ளார்
திக்குளார்திரிகூடத்திற்செல்வதுவிலக்கலாற்றான்
கைக்குளார்மறைக்கவல்லார்ககனமேற்கதிரோன்றனை, ௨௰

புரிதருசந்தியோமம்புண்ணியவொழுக்கநீக்கிப்
பரிவொடுவினவுவாரைப்பாமதநூலால்வென்று
திரிதலாலெதிர்வேறின்றித்தீமையோனவ்வூர்க்கெல்லா
மொருவனுயிர்கட்கெல்லாமுறுகண்செய்கலைபோலானான். ௨௧

வாரணிதனத்தார்மோகமடைமையோனிவ்வாறாகக்
காரணிபொழிற்சோணாட்டுக்காவிரிவடதீரத்துத்
தாரணிபுகழுமேன்மைச்சைவமாமறைவல்லாள
னாரணமிருதியங்கமாகமம்புராணமோர்ந்தான். ௨௨

கவனமார்மக்கண்மாதர்கைப்பொருள்சுற்றமாதி
புவனமேல்வாழ்க்கையெல்லாம்பொய்யெனவுணர்ந்தமெய்யான்
பவநெறியுலகமாயைப்படரிருளொதுங்கவுண்மைச்
சிவநெறிவிளக்குஞானச்செங்கதிருதயம்போல்வான். ௨௩

காயிகம்வாசிகஞ்சேர்கருதுமானதமென்றோது
மாயமுப்பாலுண்மேலாமரும்பெற்றசெயல்களுன்னிப்
பாயுநீர்நதிகளாடல்பரமனைப்பணிதல்வாழ்த்தன்
மேயசீர்த்தியானமென்னும்விதிமுறைமதியினோர்ந்து. ௨௪

கங்கையேமுதலாந்தீர்த்தங்கடவுளாலயங்கட்கேக
லங்கநிச்சயமிலாதாலரிதெனவுணர்ந்துஞாலந்
தங்குமெய்த்தீர்த்தமெல்லாந்தருபலந்திரிகூடத்திற்
பொங்குசித்திரப்பூங்கங்கைதருமெனும்புராணமுன்னி. ௨௫

தக்கசீர்ப்புதலாய்ப்புல்லாய்த்தருக்களாய்விலங்காய்த்தேவாய்
மக்களாய்த்தவங்கள்செய்யுமாதலந்திருக்குற்றால
மூக்கடவுளருமானமூர்த்தியேபலவின்மூர்த்தி
யொக்குமூவகையினாலுமுயர்ந்ததத்தலமேயென்று. ௨௬

புனிதமாதலத்துக்கேகும்புண்ணியனிதம்பூண்டு
தனிபுனற்பொன்னியாடிக்கடவுளைப்போற்றிவைகை
குனிதிரைச்சேதுமூழ்கிக்குமரவேளைச்சென்றுபோற்றி
மனுநெறிக்கொள்கைமேவிமறையவர்வீதிசார்ந்தான். ௨௭

சார்தலுஞ்சைவவேடந்தனைப்பெருக்குசலனென்றா
வார்தருவெண்ணீறுடிமணியக்கவடங்கள்பூண்டாய்
கூர்தருமறையோன்போல்வாய்கோலம்வேறெடுத்தவாறு
லோர்தருசுருதியங்கமுணர்ந்திலைபோலுமென்றான். ௨௮

நீகிறாதுணர்ந்தார்செய்கைநிகழ்த்திடில்வெளியாமென்ன
வோதினன்சைவவேதனோதலுங்குசலன்சீறி
வாதியேல்வருதியென்றனவருமலர்தருக்கீகநோக்கி
வேதியர்திரண்டாரங்கோர்விசாலமண்டபத்துநாப்பண். ௨௯

நாதனைப்பரவாவண்ணநாதனைநெறிவெறுக்கும்
போதனைக்குசலன்வாய்மைபுகலவதுபுணர்ப்போவென்பார்
சாதனைக்கள்வர்சோரந்தனைவெளிப்படுத்தவந்த
சோதனைக்கணிதாபோலத்தோன்றினன்மறையோனென்பார். ௩௰

காதியமறையோன்கலவிக்கடலெனப்பார்குசலனென்பா
னோதியார்நாவாய்வீறன்கடூக்கவுமுரியோனென்பா
ராதலினிரண்டுமின்றேயவையகத்தறிவோமென்பா
நீதிநூனெறியிலவனன்றோநெறியிலயாநிற்போமென்பார். ௩௧

அந்தணரிவ்வாறுகவருமறைச்சைவவேதன்
வந்தனனிருந்தாரோபால்வைதிகச்சவையினூடே
கொந்துசோசமையவாதர்குழாத்தொடுங்குறுகூட்ட
மிர்துவைவெதிர்ந்தாலென்னவெதிர்ந்தனன்குசலன்மாதோ. ௩௨

இயம்புதற்கெதிராவிட்டானெண்ணிலாமதத்தோர்தம்மை
நயம்பெறுசைவவேதனனைவரைசக்கூவிச்
சயம்பெறுமறைநூலாலேசமயநூல்பலவும்வென்று
வியன்பெறுமறிவிலாதீர்வெறுவிதினெழுகவென்றான். ௩௩

ஆங்கவரொழுந்தகாலையரியமாமறையோரெல்லாம்
பாங்குசேர்சைவவேதன்பரிவசேருரையினாலே
தாங்குபதேசம்பெறறுச்சைவவைதிகங்கள்சார்ந்தார்
வாங்குசீர்த்தமிழ்நாடெல்லாம்வாய்மையாலுயர்ந்தவன்றே ௩௪

வளர்ந்ததுதிருவெண்ணீறுவஞ்சகர்வெருவியோடத்
தளர்ந்ததுசமயபேதஞ்சைவவைதிகங்களோங்கி
கிளர்ந்ததுமேலோர்சகங்கிளைத்ததீங்கியதிநீதி
யளந்ததுபுவன்மூன்றுமண்ணலஞ்செழுத்தின்செல்வம். ௩௫

அன்னிலுறிவ்வாறுசுவறிவிலாக்குசலனெனும்பான்
கன்னினுற்கண்டாலன்றிக்கடவுளைக்கருதேனென்றான்
புண்ணியநூலாற்காணப்பொறியிலாய்மறலிதூதர்
நண்ணுதீவினையிற்காண்டிநாளையென்றெழுந்தான்மேலோன். ௩௬

சைவமாதவர்கள்சூழச்சங்கமாமறையோர்போற்ற
மெய்வளர்சுருதியாரப்பவிறற்சிவமறையோனெய்ப்
பொய்வளர்மனத்தார்க்கெட்டாப்புனிதனைத்திரிகூடத்துத்
தெய்வநாயகனைப்போற்றித்திருவருள்பெற்றுப்போந்தான். ௩௭

வேறு

கேழ்பெருகுஞ்சிவமறையோன்றனைவணங்குங்கேள்வியினோர்
வாழ்வுபடைத்தினிதுயர்ந்தார்வணக்கவனுங்காக்கைபோற்
றாழ்வுபடைத்தான்குசலன்செல்வம்போய்த்தடுமாறி
பாழ்கடலிற்கலங்கவிழ்த்தநாய்கன்போலலமந்தான். ௩௮

ஏயுநான்மறைப்பொருளைத்தெய்வத்தையிகழ்ந்துரைத்த
வாயினுறுசுவைக்கலாதுவறுமையாற்பசியுழந்து
நோயினுலுருவழிந்துநோக்குவார்புறம்பழிப்பத்
தாயனார்புறநதள்ளச்சந்தியிற்பந்தாயினன். ௩௯

ஏற்பதற்கோர்சவியின்றியையமிடுவாருமின்றி
யூர்ப்புறமாமம்பலத்திலுழன்றுபிணியாற்சுழன்று
தீர்ப்பதற்கோர்செயலின்றித்தெண்ணீரொன்றேதவித்துப்
பார்ப்பதற்கோர்துணையின்றியாவிபதைபதைத்திறந்தான். ௪௰

இறந்தானைக்காலபடரிரும்பாசத்தாலிறுக்கிப்
பறந்தாடக்காலதண்டங்கொடுபுடைத்துப்படிவமெலாந்
துறந்தாடமூவிலைவேல்கொடுசுழற்றிச்சுழல்விழியை,
மறந்தாவுங்கருங்காகம்வளைந்துகுத்தக்கொடுபோனார். ௪௧

இவ்வாறுகொடுபோங்காலிவன்புரிந்தகொடுவினையு
மவ்வாறுமறையவன்சொற்குளுங்கினைத்தயர்காலைச்
செவ்வாறுதிரிகூடத்தெல்லையதோவடுத்ததெனை
வெவ்வாறுகொடுதிருப்பிரமன்றூதர்விலக்கினரால். ௪௨

அருண்மறையோன்மொழிக்கிணங்கானலுத்திடுந்தூதுவர்மொழியாற்
பொருவிலிளமையிற்பயின்றகாந்தத்தின்பொருளுணர்ந்து
கருதரியார்திரிகூடங்கதிதருமென்பதுகுறித்தான்
குருமொழியையிகழ்ந்தார்க்குத்தண்டமேகுருவாமால். ௪௩

சிறக்கினூர்பணிவுதற்கோதுதர்வரிந்திடுகையிற்றி
னிறக்கினுல்விழிபிதுங்கிருகாமுங்கூடாதா,
அறப்பயர்த்துவீழ்வார்போல்வீழ்ந்தொருக்காற்றிரிகூடங்
குறிப்பினுற்றிசைநோக்கிக்குற்றாலமெனத்தொழுதான். ௪௪

